12th February 1959]

VII.—GOVERNMENT BILL.

THE MADRAS GENERAL SALES TAX BILL, 1958 (L.A. BILL NO. 6 OF 1958)— *cont*.

MR. SPEAKER : We shall now proceed with the consideration of the General Sales Tax Bill.

*Clause 2.*

MR. SPEAKER : I have received notice of a number of amendments. There are Government amendments also to this clause. I will call the names of Members and the number of their amendments. Hon. Members will then move their amendments.

SRI S. LAZAR : Sir, I move—

In sub-clause (*a*), *omit* the words ' to be '.

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

In item (*e*) after the words " a business nature " *add* the words " with profit motive ".

The amendment was duly seconded.

SRI S. LAZAR : Sir, I move—

In sub-clause (*e*), *for* the words " supplying or distributing ", the words " supply or distribution " shall be *substituted*.

The amendment was duly seconded.

SRI S. LAZAR : Sir, I move—

In sub-clause (*f*), *omit* the words " to be ".

The amendment was duly seconded.

SRI S. LAZAR : Sir, I move—

In the explanation to sub-clause (*g*), *for* the words " club or firm ", the words " club, firm " shall be *substituted*.

The amendment was duly seconded.

SRI S. LAZAR : Sir, I move—

In sub-clause (*g*) (*i*), *for* the words " Hindu undivided family ", the word " firm " shall be *substituted*.

The amendment was duly seconded.

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

In the explanation to item (iv) of sub-clause (*g*), *for* the word " including ", *substitute* the word " excluding ".

The amendment was duly seconded.

SRI M. KALYANASUNDARAM : Sir, I move—

In the explanation to item (iv) of sub-clause (*g*), *for* the words and brackets " (including a co-operative society) ", *substitute* the words and brackets " (excluding a co-operative society) ".

The amendment was duly seconded.

SRI S. LAZAR : Sir, I move—

In sub-clause (*i*), *omit* the words " to be ".

The amendment was duly seconded.

SRI S. LAZAR : Sir, I move—

In sub-clause (*j*), *for* the words " newspapers, actionable claims ", the words " newspapers, journals, actionable claims " shall be *substituted*.

The amendment was duly seconded.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move—

In sub-clause (*j*), *after* the word " newspapers " *add* the words " and periodicals ".

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

In item (*n*), *omit* the words " and includes a transfer of property in goods involved in the execution of a works contract ".

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

In explanation (1) to item (*n*), *omit* the words " whether or not in the course of a business ".

The amendment was duly seconded.

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

In the explanation (1) of sub-clause (*n*), *for* the words " including ", *substitute* the word " excluding ".

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

In explanation (1) to sub-clause (*r*), *omit* the word " or " occurring after the word " grading ", and *after* the word " sorting ", *add* the words " or drying ".

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

*Omit* sub-clause (*s*).

The amendment was duly seconded.

12th February 1959]

* THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—

In sub-clause (*e*), *for* the words " supplying or distributing " *substitute* the words " supply or distribution ".

In sub-clause (*j*), for the words " grass and things "; *substitute* the words " grass or things ".

In sub-clause (*l*), the following shall be *inserted* at the end—

" or a place where a dealer keeps his books of accounts ".

In sub-clause (*q*), *for* the words " any person ", *substitute* the words " any portion ".

In sub clause (*r*), in explanation (2) (*i*), *for* the words " usuals proportion ", *substitute* the words " usual proportion ".

These amendments are all verbal. Some amendments correct the typographical errors. In the first amendment, we seek to substitute the words " supply or distribution " for the words " supplying or distributing ". In the second amendment, for the expression " grass and things ", the amendment seeks to substitute the expression " grass or things ". In the third amendment, we have inserted the words " or a place where a dealer keeps his books of account " at the end of sub-clause (1). This is intended to bring within the definition of a place of business a place where the dealer keeps his books of account. Otherwise a dealer can keep his books of account at a different place and say that that place is not the place of his business and thereby prevent the tax authorities from entering that place. The fourth amendment is intended to correct a typographical error. For the words " any person ", the amendment seeks to substitute " any portion ". The fifth amendment substitutes the words " usual proportion " for the words " usuals proportion ". These are the amendments I move.

MR. SPEAKER : Government amendments will have precedence over other amendments. In view of an identical Government amendment to sub-clause (*e*), Sri Lazar's amendment to sub-clause (*e*) will have to go. The clause and the amendments are now before the House for discussion. Sri S. Lazar will now speak.

SRI S. LAZAR : கனம் சபாநாயகர் அவர்களே, நான் கொடுத்திருக்கக்கூடிய திருத்தங்கள் அத்தனையும் " வெர்பல் " திருத்தங்கள். 10-10 a.m.
சாதாரணமாகப் பார்க்கிற போதே, இதெல்லாம் அவசியம் என்பதை கனம் அமைச்சர் ஒத்துக் கொள்வார்கள் என்பதில் சந்தேகமில்லை.

இதிலே 3-வது திருத்தத்தைப் பொருத்தவரையில் அரசாங்கமே ஏற்றுக்கொண்டு அரசாங்கத்தின் சார்பாகவே ஒரு திருத்தம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. அந்தத் திருத்தமும் இருக்கிறது. இதுபோன்று திருத்தங்கள் கொண்டுவரக் கூடிய காலத்தில், அவர்களை ஊக்குவிக்கும் முறையில் அவர்களுடைய திருத்தங்களை ஒத்துக்கொள்ள வேண்டுமே யல்லாது, அரசாங்கம் தனியாக அதே திருத்தங்களைக் கொண்டு வரக் கூடாது என்றும் இந்தச் சபையிலுள்ள அங்கத்தினர்கள் சார்பாக நான் அமைச்சர் அவர்களை வேண்டிக்கொள்கிறேன்.

[Sri S. Lazar] [12th February 1959

முதலாவது திருத்தம், " அப்பெல்லெட் அஸிஸ்டெண்ட் கமிஷனர் " என்ற வார்த்தையை விளக்கம் செய்கிற நேரத்தில் " மீன்ஸ் எனி பர்ஸன் அப்பாயிண்டெட் டு பீ ஆன் அப்பெல்லெட் அஸிஸ்டெண்ட் கமிஷனர் " என்று இருக்கிறது. சாதாரணமாக, ஆங்கிலத்திலே " அப்பாயிண்டெட் " என்று வருகிற போது உடனே பின் தொடரவேண்டும் என்ன அப்பாயிண்ட்மெண்ட் என்று. " டு பீ " என்ற இரண்டு வார்த்தைகள் அவசியம் இல்லாத வார்த்தைகள். மற்ற சட்டங்களில் இந்த மாதிரி போட்டிருக்கிறோம், ஆகையால் இங்கேயும் இருக்கலாம் என்று சொன்னால் தவிர, ஆங்கில பாஷைப் பிரகாரம் பார்க்கும் போது இது அவசியமில்லை. ஆகையால் தான் இந்தத் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன்.

அடுத்தபடியாக, நான் ஏற்கெனவே சொன்ன திருத்தம். " ஈ " என்ற இடத்தில் ஒரு திருத்தம் செய்ய வேண்டுமென்று கொடுத்திருக்கிறேன். அந்தத் திருத்தத்தை அமைச்சர் அவர்களே கொண்டு வந்திருக்கிறார்கள். ஆகையால் நான் சொன்ன திருத்தத்தை அமைச்சர் அவர்கள் ஏற்றுக் கொண்டு விட்டார்கள்.

" கமெர்ஷியல் டாக்ஸ் ஆபீஸர் " என்ற பதத்தை விளக்கம் செய்கிற போதும் " டு பீ " என்ற வார்த்தைகள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இந்த வார்த்தைகளுக்கு அவசியமில்லை.

" பிஸினெஸ் " என்ற வார்த்தையை விளக்கம் செய்கின்றதிலே " காமர்ஸ் ஆர் மானுபாக்சர் " என்று, " மானுபாக்சர் " என்ற வார்த்தைக்குப் பிறகு, " , " இல்லாது இருக்கிறது. ஆகையால் " பிஸினெஸ் " என்று சொன்னால் " டிரேட் " " காமர்ஸ் " " மானுபாக்சர் " என்ற மூன்று முறைகளும் அமைந்திருக்கிற காரணத்தினால், " மானுபாக்சர் " என்ற வார்த்தைக்குப் பிறகு ஒரு " , " இருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. அதையும் அரசாங்கம் ஏற்றுக்கொள்ளும் என்று நினைக்கிறேன்.

அடுத்தபடியாக, " டீலர் " என்ற வார்த்தைக்கு விளக்கம் அமைத்திருப்பதிலே, முதலாவது உட்-பிரிவில் " ஹிந்து அன்டிவைடெட் பாமிலி " என்று போட்டிருக்கிறது. " ஹிந்து அன்டிவைடெட் பேமிலி " என்று தனியாக ஒரு " எண்டிடி " கிடையாது. ஆகையால் இந்த வார்த்தைகளுக்குப் பதிலாக " பெர்ம் " என்ற வார்த்தையைப் போட்டுக் கொள்ள வேண்டுமென்று ஒரு திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். இதற்கு ஆதாரம் 4-வது உட்-பிரிவிலே இருக்கிறது என்று சுட்டிக் காட்ட விரும்புகிறேன். அதேபோல, உப பிரிவு (g)-யின் உட்பிரிவு (iv)-ல் " firm or company "
10 20 a.m. என்ற வார்த்தைகள் போடப்பட்டிருக்கும்போது, உட்பிரிவு (i)-இலும் " பெர்ம் " என்ற வார்த்தை இருக்கவேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது.

மேலும், " ஹிண்டு அண்டிவைடட் பாமிலி " என்று தனியாக ஒரு " லீகல் எண்டிடி " இல்லை. அது ஒரு " பெர்ஸன் " தான். ஆகவே அந்த வார்த்தைகளுக்கு பதிலாக " பெர்ம் " என்ற வார்த்தையைப் போட வேண்டும் என்று திருத்தம் பிரேரேபித்திருக்கிறேன். இந்தச் சிறிய திருத்தத்தையும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, உப பிரிவு (iv)-ல் உள்ள எக்ஸ்ப்ளனேஷனில் " A society (including a co-operative society), club or firm or an association........ " என்று இருக்கிறது. இதில் " or " என்ற வார்த்தை அவசியமில்லை என்று நினைக்கிறேன். உதாரணமாக, இதே மசோதாவில் 2-வது பிரிவின் உப பிரிவு (n)-ல் உள்ள எக்ஸ்ப்ளனேஷனில், " The transfer of property involved in the supply or distribution of goods by a society (including a co-operative society), club, firm, or any association...... " என்று கண்டிருக்கிறது. உப பிரிவு (n)-ல் உள்ள எக்ஸ்ப்ளனேஷனில் உள்ள அர்த்தத்துடன் தான் இந்த உட்பிரிவு (iv)-ல உள்ள எக்ஸ்ப்ளனேஷனும் அமைய வேண்டும் என்பது நமது

12th February 1959] [Sri S. Lazar]

நோக்கம். அப்படி இருக்கும்போது, இங்கே " or " என்ற வார்த்தை இருந்தால் இதன் அர்த்தம் சற்று மாறுபடுகிறது. இதிலிருந்து " or " என்ற வார்த்தையை நீக்குவதற்கு கனம் அமைச்சருக்கு எந்தவிதமான ஆட்சேபணையும் இருக்காது என்று நினைக்கிறேன்.

இரண்டாவது பிரிவின் உட் பிரிவு (i)-ல் " to be " என்ற வார்த்தைகள் இருக்க வேண்டிய அவசியம் இல்லை என்றும் திருத்தம் கொடுத்திருக்கிறேன். அந்தத் திருத்தத்தையும் கனம் அமைச்சர் ஏற்றுக்கொள்வார் என்று நம்புகிறேன்.

அரசாங்கத் திருத்தங்கள் மிக மிக அவசியமானவை. மசோதாவைப் படித்துப் பார்க்கும்போது எங்களுக்கு அந்தக் குறைகள் புலப்படவில்லை. அரசாங்கத் திருத்தங்களையும் வரவேற்கிறேன.

" Dealer " means any person who carries on the business of buying, selling, supplying or distributing goods, etc. . . . . and includes—

' (*i*) the Central Government, a State Government, local authority, company or Hindu undivided family.'

' (*g*) (iv) every local branch of a firm or company situated outside the State.'

*Explanation to clause* (*g*).—A society (including a co-operative society), club or firm or an association . . .'

Instead of club or firm, it should be ' club, firm '.

*Explanation* (1) *to sub-clause* (*n*).—The transfer of property involved in the supply or distribution of goods by a society (including a co-operative society), club, firm or any association . . .'

MR. SPEAKER : You have not spoken on your amendment to sub-clause (*j*).

SRI S. LAZAR : Not spoken, Sir . . .

MR. SPEAKER : I am not compelling him to speak on it. If he does not want to speak, that is all right.

SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவில் " காஷுவல் ட்ரேடரும் " பிஸினஸ் பண்ணுபவர்களுடன் சேர்க்கப்பட்டிருக்கிறார். சாதாரணமாக, யாருமே வாங்காமலும் விற்காமலும் இருக்க முடியாது. உண்மையாகவே, " ஸேல் " என்பது எப்போது வருகிறது ? ஒருவன் ஒரு பொருளை லாபத்திற்கு விற்றால், அப்போது அது " ஸேல் " ஆகிறது. ஆனால், சாதாரணமாக, கார் வியாபாரம் செய்பவர்கள் வீட்டில் உட்கார்ந்துகொண்டே அதைச் செய்கிறார்கள். எனவே இந்த விஷயத்தில் கனம் அமைச்சரின் வாதமும் சரிதான். ஆனால் அவ்வாறு வியாபாரம் செய்பவர்களுக்குத்தான் வரி போட வேண்டும். அந்த நோக்கத்துடன், 2 (e)-ல் " எ பிஸினெஸ் நேச்சர் " என்ற வார்த்தைகளுக்குப் பிறகு " வித் ப்ராபிட் மோடிவ் " என்ற வார்த்தைகளைச் சேர்க்க வேண்டும் என்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். அதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கனம் அமைச்சரைக் கேட்டுக் கொள்கிறேன்.

[Sri N. K. Planisami] [12th February 1959

அடுத்தப்படியாக, உப பிரிவு (n)-ல் " ' sale ' with all its grammatical variations means every transfer of the property in goods......and includes a transfer of property in goods involved in the execution of a works contract....'' என்று கண்டிருக்கிறது. மேலும், உப பிரிவு (r)-ல் உள்ள எக்ஸ்ப்ளனேஷன் (2)-ல் (i)-வது பகுதியில் " the amount for which goods are sold shall, in relation to a work contract, be deemed to be the amount payable to the dealer for carrying out such contract, less such as may be prescribed of such amount, represnting the usual proportion of the cost of labour to the cost of materials used in carrying out such contract; '' என்று கண்டிருக்கிறது. ஏற்கெனவே, டி.வி.எஸ். கம்பெனியார் சம்பந்தப்பட்ட கேஸை எடுத்துக்கொண்டாலும் சரி, கானென் டங்கர்லி கம்பெனியார் சம்பந்தப்பட்ட கேஸை எடுத்துக்கொண்டாலும் சரி, உழைப்புக்கு வரி போடக்கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதை சர்க்கார் மனதில் கொள்ளவேண்டும். எலெக்டிரிக் பல்போடு வயர் முதலிய சாமான்கள் சேர்ந்தால், அது வர்க்ஸ் காண்ட்ராக்ட். அப்போது பல்ப் மட்டும்தான் " ப்யூர் சேல்ஸ் "-ன் கீழ் வருகிறது. " மெடீரியலுக்கு " மட்டும்தான் வரி போட வேண்டும். உழைப்பிற்கு வரி போடக்கூடாது. ஆகவே உப பிரிவு (n)-ல், " and includes a transfer of property in goods involved in the execution of a works contract " என்ற வார்த்தைகளை நீக்கிவிட வேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன்.

மேலும், உப பிரிவு (n)-ன் கீழ் உள்ள எக்ஸ்ப்ளேனேஷன் (1)-ல் " whether or not in the course of a business '' என்ற வார்த்தைகள் இருக்க வேண்டிய அவசியம் இல்லை என்று நினைக்கிறேன். அவைகளை நீக்கிவிட வேண்டும் என்றும் கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

சில விவசாயப் பொருள்களுக்கு வரியினின்றும் விலக்கு அளிக்கப் பட்டிருக்கிறது. பாக்கைப் பொறுத்தவரையிலும், அதை விவசாயிகளும் விற்கிறார்கள். அதை உலர்த்தவும் செய்கிறார்கள். எனவே, உப பிரிவு (r) -ன் கீழ் உள்ள (1)-வது எக்ஸ்பளனேஷனில் " க்ளீனிங், க்ரேடிங் ஸார்டிங் " என்ற வார்த்தைகளுடன் " ட்ரையிங் " என்ற வார்த்தையை சேர்க்க வேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன். என்னுடைய திருத்தங்களை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

SRI S. M. ANNAMALAI: மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, கூட்டுறவுச் சங்கங்களுக்கு விற்பனை வரியினின்றும் விலக்கு அளிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் நான் என்னுடைய திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். கூட்டுறவுச் சங்கங்கள் இப்போதுதான் கிராமங்களில் அதிகமாக வளர்ச்சியடைய ஆரம்பித்திருக்கின்றன. கூட்டுறவுச் சங்கங்கள், ஆரம்பிக்கப்பட்ட பிறகு நல்ல முறையில் செயல்படுவதற்கு 4-5 ஆண்டுகள் ஆகின்றன. பொது மக்களின் நம்பிக்கையைப் பெற்று இயங்கவேண்டிய கூட்டுறவுச் சங்கங்கள் தனி முதலாளிகளுடன் போட்டியிடக்கூடிய நிலையில் இல்லை. அப்படிப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களை விற்பனை வரிச் சட்டங்களுக்கு உட்படுத்துவது நியாயமல்ல. எனவே, கூட்டுறவுச் சங்கங்களை விற்பனை வரிச் சட்டத்திற்கு உட்படுத்தக்கூடாது என்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். அதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

SRI K. SATTANATHA KARAYALAR: கனம் சபாநாயகர் அவர்களே, 2-வது பிரிவின் உப பிரிவு (j)-ல் " ' goods means all kinds of movable property other than newspapers . . . '' என்று கண்டிருக்கிறது. " நியூஸ்பேபர்ஸ் " என்ற வார்த்தை இங்கே தினப் பத்திரிகைகளை மட்டும்தான் குறிக்கிறதா அல்லது மாத இதழ்கள், வார இதழ்கள் முதலிய எல்லாப் பத்திரிகைகளையும் குறிக்கிறதா ? இது மசோதாவில் விளக்கப்படவில்லை. வார இதழ்கள், மாத இதழ்கள் முதலிய எல்லாப் பத்திரிகைகளையும் இதற்கு உட்படுத்தவேண்டும் என்ற

12th February 1959] [Sri K. Sattanatha Karayalar]

நோக்கத்துடன் நான் இந்தத் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். வார இதழ்களும், மாத இதழ்களும் நியூஸ்பேப்பர்களின் கடமையைத்தான் செய்கின்றன. அவைகளேயும் இதற்கு உட்படுத்தவேண்டியது மிக மிக அவசியம். " நியூஸ் பேபர்ஸ் " என்ற வார்த்தை தினப் பத்திரிகைகளே மட்டுமன்றி மாத இதழ்களேயும் வேறு இதழ்களேயும் குறிக்கின்றது என்ருல், என்னுடைய திருத்தத்திற்கு அவசியமில்லே என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

**MR. SPEAKER :** ஸ்ரீ கல்யாணசுந்தரம் அவர்களுடைய திருத்தத்திலும் ஸ்ரீ அண்ணுமலே அவர்களுடைய திருத்தத்திலும் ஒரே நோக்கம் தான் காணப்படுகிறது. ஸ்ரீ அண்ணுமலே பேசிவிட்டார். ஸ்ரீ கல்யாண சுந்தரம் அவர்களும் பேச விரும்புகிருரா ? பேச வேண்டுமானுல் அவர் பேசலாம்.

**SRI M. KALYANASUNDARAM :** நான் ஒரு முக்கியமான விஷயம் சொல்ல விரும்புகிறேன். கூட்டுறவு சொசைட்டிகளுக்கு விற்பனே வரியினின்றும் விலக்கு அளிக்க வேண்டும். தொழிற்சாலேகளில் வேலே செய்யும் தொழிலாளர்களுக்கு நியாயமான விலேயில் உணவுப் பொருள் களேயும் மற்ற பல பொருள்களேயும் வினியோகம் செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் பல கூட்டுறவு சொசைட்டிகள் இயங்கி வருகின்றன. சில இடங்களில் தப்பிப் பிழைத்த அர்பன் கோவாபரேடிவ் சொசைட்டி களும் இருக்கின்றன. இவைகள் தனிப்பட்ட வியாபாரிகளுடன் போட்டியிட முடிவதில்லே. தனிப்பட்ட வியாபாரிகள் தங்கள் விற்பனேயைப் பூராவாகக் கணக்கில் கொண்டு வராமல் விற்பனே வரியிலிருந்து தப்பித்துக்கொள் கிருர்கள். கூட்டுறவு ஸொஸைட்டிகள் அந்த முறையை கையாள முடிவ தில்லே. அவைகள் தங்கள் விற்பனே பூராவிற்கும் பில்கள் போட வேண்டி யிருக்கிறது. இந்த நிலேயில் அவைகளுக்கு விற்பனே வரியிலிருந்து விலக்கு அளிக்காவிட்டால் அவைகள் மிகவும் பாதிக்கப்படும். எனவே கூட்டுறவு ஸொஸைட்டிகளுக்கு விற்பனே வரியிலிருந்து பாதுகாப்புக் கொடுக்க வேண்டியது அவசியம். அரசாங்கத்தார் அவைகளுக்கு மற்ற பல விதங் களில் ஊக்கம் கொடுத்துவரக்கூடும். இருந்தாலும், விற்பனே வரியிலிருந்து விலக்குப் பெறும் சலுகையையும் அவைகளுக்கு அளிக்கவேண்டும். அந்த நோக்கத்துடன்தான், " இன்க்லூடிங் எ கோவாபரேடிவ் ஸொஸைடி " என்ற வார்த்தைகளுக்கு பதிலாக " எக்ஸ்க்லூடிங் எ கோவாபரேடிவ் ஸொஸைடி " என்ற வார்த்தைகளேப் போட வேண்டும் என்ற திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். அதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

***THE HON. SRI R. VENKATARAMAN :** கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர்கள் கொடுத்துள்ள திருத்தங்களே முதன் முதலில் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும், அதே போன்ற திருத்தங்களே அரசாங் கத்தார் கொண்டு வரக்கூடாது என்றும் கனம் அங்கத்தினர் ஸ்ரீ லாஸர் வலியுறுத்திக் கூறினுர். கனம் அங்கத்தினர்கள் என்னென்ன திருத்தங் களேக் கொடுக்கப்போகிருர்கள் என்பது அரசாங்கத்தாருக்கு முன் கூட்டியே தெரிந்திருந்தால் அரசாங்கத்தார் அதே மாதிரியான திருத்தங்களே கொடுக்காமல் இருந்திருப்பார்கள். அரசாங்கத்தாருக்கு, கனம் அங்கத்தினர் கள் என்னென்ன திருத்தங்கள் கொடுப்பார்கள் என்பது, தாங்கள் திருத்தங்கள் கொடுத்தபோது தெரியாது. சட்டத்தைக் குறைகளுடன் இயற்றிவிடக்கூடாது என்ற எண்ணத்தில் அரசாங்கத்தாரும் திருத்தங்கள் கொடுத்திருக்கிருர்கள். எனக்கு ஆட்சேபணே இல்லே ; ஒரே மாதிரியான திருத்தங்களேப் பொறுத்த வரையில், நான் கொடுத்துள்ள திருத்தங் களேப் போடுவதற்கு பதிலாக கனம் அங்கத்தினர்கள் கொடுத்துள்ள திருத்தங்களேப் போட்டு அவைகளே நான் ஒத்துக்கொள்வதாக எடுத்துக் கொள்ளலாம்.

10–30 a.m.

அடுத்தப்படியாக, சில வார்த்தைகளேக் குறித்து கனம் லாஸர் அவர்கள் பல திருத்தங்கள்கொடுத்தார்கள். அவைகளேயெல்லாம் ஆராய்ந்து பார்த் ததில் இப்பொழுது இருப்பவைகளே சரியாக இருக்கிறது என்று தான்

[Sri R. Venkataraman] [12th February 1959

சர்க்காருக்குத் தோன்றுகிறது. "**to be**" என்று இருப்பதை அவர்கள் ஆட்சேபித்தார்கள். அதை சட்ட இலாகா பரிசீலனை செய்ததில் அவ்வாறு இருப்பதில் தவறு இல்லை என்று தெரிகிறது. ஆகவே இந்த அமென்ட்மென்ட் அவசியமில்லை. அடுத்தபடியாக, இரண்டாவது அமென்ட்மென்ட் பழனிசாமி அவர்கள் கொடுத்திருக்கக்கூடிய திருத்தம், '**after the words "a business nature" add the words "with profit motive"**' என்பதாகும். இப்பொழுதுள்ள சட்டப்படி லாபக் கருத்துடன் வியாபாரம் செய்தால்தான் அதற்கு வரி உண்டு என்று இருக்கிறது. அதை மாற்றுவதற்காகத்தான் இந்த சட்டத்தில் ஏற்பாடு செய்திருக்கிறோம். கோவாப்பரேட்டிவ் சொஸைட்டியாக இருந்தாலும் சரி அல்லது காஸ்மோபாலிட்டன் கிளப்பாக இருந்தாலும் சரி விற்பனை செய்தால்தான் விற்பனை வரிக்கு உள்ளாகவேண்டும். லாபம் இருக்கிறதா இல்லையா என்பது பிரச்னை அல்ல. விற்பனை நடக்கிறதா இல்லையா என்பது தான் பிரச்னை. விற்பனை நடப்பதால் வாங்குகிறவர்கள் வரி கொடுக்க வேண்டுமென்ற அடிப்படையில் செய்திருப்பதால் அந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. மூன்றாவது அமென்ட்மென்டைப் பற்றி சொல்லிவிட்டேன். லாஸர் அவர்களின் அமென்ட்மென்டை ஏற்றுக்கொள்கிறேன். நான்காவது அமென்ட்மென்ட், "**to be**" என்பதைப் பற்றி சொல்லிவிட்டேன். ஐந்தாவது அமென்ட்மென்ட், "**club, or firm**" என்று இருப்பதைப் பற்றி லாஸர் அவர்கள் ஆட்சேபணை செய்திருக்கிறார்கள். இதை இரண்டு விதமாக, "**club, firm**" **or club, firm or**" என்று எழுதலாம். ஆகவே இதற்கும் அவசியமில்லை என்று நான் கருதுகிறேன். ஆறாவது அமென்ட்மென்டை ஸ்ரீ சம்பத் அவர்கள் மூவ் செய்யவில்லை. ஏழாவது அமென்ட்மென்ட், ஜாயின்ட் பாமிலி என்ற வார்த்தையை நீக்க வேண்டுமென்று லாஸர் அவர்கள் சொன்னார்கள். அதை நீக்கி விட்டால் ஹிந்து ஜாயின்ட் பாமிலி செய்கிற வியாபாரங்கள் வரியிலிருந்து விலக்கப்படும். ஆகவே அதை ஒத்துக்கொள்வதற்கில்லை. எட்டாது, மூவ் செய்யவில்லை. ஒன்பதாவது, அண்ணாமலை அவர்கள் கொடுத்தது. கோவாப்பரேட்டிவ் சொஸைட்டிகளை இந்த வரியில் இருந்து நீக்க வேண்டுமென்பது. நேற்று பொது விவாதத்திற்கு பதில் அளிக்கையில் சொன்னபடி, விற்பனை செய்கிற இடத்தில் வசூல் செய்ய வேண்டுமென்பது நோக்கம். இதில் கோவாப்பரேட்டிவ் சொஸைட்டிகளுக்கு சலுகை காட்ட வேண்டுமென்று சொன்னால், வேறு முறையில்தான் காட்ட வேண்டும். அதிலும், முக்கியமாக வியாபாரத்துறையில் தனியார்கள் ஈடுபட்டிருப்பவைகளுக்கு வரியும், கூட்டுறவு சொஸைட்டிகளுக்கு வரி இல்லையென்றும் சொன்னால் அது வர்த்தகத் துறையில் ஈடுபட்டிருப்பவர்களாகிய, தனியார்களைப் பாதிக்கும். இச்சட்டம் எல்லோருக்கும் சமமாக அமுல் நடத்தப்படும், அல்லது அதன் நோக்கமே தவறி விடும். ஆகவே அதை ஏற்றுக்கொள்வதற்கில்லை. சில கோவாப்பரேட்டிவ் சொஸைட்டிகளுக்கு விதிவிலக்கு கொடுத்ததைக் கூட டாக்டர் லோகநாதன் அவர்கள் அவர்களது ரிப்போர்ட்டில் கண்டித்திருக்கிறார்கள். அதனால் விதிவிலக்கு கொடுக்க முடியவில்லை. அடுத்தப்படியாக, 11-வது அமென்ட்மென்ட், லாஸர் அவர்கள் "**to be**" என்பதை எடுத்து விட வேண்டுமென்று சொன்னார்கள். அதற்கு முன்பே நான் பதில் சொல்லிவிட்டேன். 12-வது அமென்ட்மென்டை ஸ்ரீ ஸ்ரீனிவாஸ ஐயர் மூவ் செய்யவில்லை. 13-வது, நியூஸ் பேப்பர்ஸ்யைப் பற்றிய அமென்ட்மென்ட். நியூஸ் பேப்பர்ஸ் என்ற டெபனிஷனில் சாதாரணமாக ஜர்னல்ஸும் வந்து விடும். அப்படி வராவிட்டால் புக்ஸ் என்ற டெபனிஷனில் அது வரும். அதாவது இந்த ஜர்னல்கள், புக்ஸ்க்கு விதிவிலக்கு கொடுத்திருப்பதால் நியூஸ் பேப்பர்ஸ் என்ற முறையிலோ அல்லது புக்ஸ் என்ற முறையிலோ அவைகளுக்கு விதிவிலக்கு அளிக்கலாம். ஆகவே இது அவசியமில்லை. 14-வது மூவ் பண்ண வில்லை. 15-வது அமென்ட்மென்ட் நான் முன்பு சொன்னதில் அடங்கியிருக்கிறது. 16-வது அமென்ட்மென்ட், "வொர்க்ஸ் காண்ட்ராக்ட்" சம்பந்தமாக பழனிசாமி அவர்கள் கொடுத்திருக்கும் திருத்தம். அது சட்டப் பரிசீலனையில் இருக்கிறது. இம்மூவபிள் ப்ராப்பர்டீஸ் சம்பந்தமாக வொர்க்ஸ் காண்ட்ராக்டில் என்னென்ன பண்டங்கள் உபயோகப்படுத்தப்

12th February 1959] [Sri R. Venkataraman]

படுகிறதோ அவற்றிற்கு வரி விலக்குக் கூடாதென்று தீர்ப்பு இருக்கிறது. அடுத்தபடியாக, சுந்தரம் மோட்டார்ஸ் கேஸில் "மூவபிள் ப்ராப்பர்டீஸ்"ல் கூட எந்தவிதமான பண்டங்களை உபயோகித்தாலும் அதற்கு வரி விதிக்கக் கூடாதென்று பத்திரிகை வாயிலாக வந்த தீர்ப்பு தெரியுமே தவிர அதன் அசல் நகலை இன்னும் ஹைக்கோர்ட்டிலிருந்து பெறவில்லை. பெற்ற பிறகு ஆலோசனை செய்யப்படும். ஆகவே அது சம்பந்தமாக எந்த முடிவும் எடுப்பதற்கில்லை. சட்டம் இப்பொழுது இருப்பது போலவே தான் இருக்கவேண்டும். 18-வது கோவாப்பரேட்டிவ் சொஸைட்டிஸ்யைப் பற்றியது. 19-வது அமெண்ட்மெண்ட், பழனிஸ்வாமி அவர்கள் கொடுத்திருக்கக்கூடியது, **add the words "or drying"?** என்றிருக்கிறது. அதை யோசனை செய்துதான் செய்யவேண்டும்.

The amendment of Sri S. Lazar to sub-clause (*a*) was, by leave, withdrawn.

MR. SPEAKER: I shall now put the amendment of Sri N. K. Palanisamy to vote. The question is—

"In item (*e*) *after* the words 'a business nature' *add* the words 'with profit motive.'"

The amendment was put and lost.

MR. SPEAKER: I shall now put the amendments of Sri S. Lazar to sub-clause (*e*) to vote. The question is:—

"In sub-clause (*e*), *for* the words 'supplying or distributing', the words 'supply or distribution' shall be *substituted*.'"

The amendment was put and carried.

The amendments moved by Sri S. Lazar to sub-clause (*f*), sub-clause (*g*) and (*g*) (*i*) were, by leave, withdrawn.

MR. SPEAKER: I shall now put the amendment of Sri S. M. Annamalai to vote. The question is:—

"In the explanation to item (iv) of sub-clause (*g*), *for* the words 'including", *substitute* the word 'excluding'."

The amendment was put and lost.

The other amendments of Sri S. Lazar and the amendment of Sri K. Sattanatha Karayalar were, by leave, withdrawn.

MR. SPEAKER: The question is—

'In the explanation to item (iv) of sub-clause (*g*), *for* the words and brackets "(including a co-operative society), *substitute* the words and brackets "(excluding a co-operative society)"'

The amendment was put and lost.

MR. SPEAKER: The question is—

"In item (*n*) *omit* the words "and includes a transfer of property in goods involved in the execution of a works contract".

[12th February 1959

SRI N. K. PALANISAMI : When the whole law is under dispute why should the Government introduce it here?

THE HON. SRI R. VENKATARAMAN : The amendment of the hon. Member relating to explanation (1) to sub-clause (*r*) may be kept pending.

MR. SPEAKER : I am now putting the amendment to vote.

The amendment was put and lost.

MR. SPEAKER : The question is—

" In explanation (1) to item (*n*) *omit* the words " whether or not in the course of a business ".

The amendment was put and lost.

MR. SPEAKER : The question is—

" In the explanation (1) of sub-clause (*n*) *for* the words including ', *substitute* the word ' excluding '."

The amendment was put and lost.

MR. SPEAKER : The question is—

' *Omit* sub-clause (*s*) '.

The amendment was put and lost.

MR. SPEAKER : The question is—

(1) " In sub-clause (*j*), *for* the words ' grass and things ', *substitute* the words ' grass or things '.

(2) In sub-clause (*l*), the following shall be *inserted* at the end

' or a place where a dealer keeps his books of accounts '.

(3) ' In sub-clause (*q*), *for* the words ' any person ', *substitute* the words ' any portion '.

(4) ' In sub-clause (*r*), in explanation (2) (i), *for* the words ' usuals proportion ', *substitute* the words ' usual proportion '.

The amendments were put and carried.

The Government amendment to sub-clause (*e*) was by leave, withdrawn.

MR. SPEAKER : Now the amendment of Sri N. K. Palanisami to explanation (1) to sub-clause (*r*) is to be kept pending. So we cannot take a vote on clause 2.

THE HON. SRI R. VENKATARAMAN : This amendment and clause 2, as amended, may be kept pending for the time being and taken up a little later and voted upon.

MR. SPEAKER : Then we will take up clause 3 now.

12th February 1959]

*Clause* 3.

MR. SPEAKER : The motion is—

' That clause 3 do stand part of the Bill.'

SRI N. MARUDACHALAM : Mr. Speaker, Sir, I move—

" In sub-clause (1) *for* the words ' ten thousand rupees ' *substitute* the words ' twenty-five thousand rupees '. "

The amendment was duly seconded.

SRI S. M. ANNAMALAI : Mr. Speaker, Sir, I move the amendment—

" In sub-clause (1) *for* the words 'ten thousand ', *substitute* the words ' twenty thousand '."

The amendment was duly seconded.

SRI N. MARUDHACHALAM : Mr. Speaker, Sir, I move—

" In sub-clause (1), *for* the words ' ten thousand rupees '. *substitute* the words ' thirty thousand rupees '."

The amendment was duly seconded.

SRI A. GOVINDASAMY : Mr. Speaker, Sir, I move—

" In sub-clause (1), *for* the words ' at the rate of two per cent ', *substitute* the words ' at the rate of one per cent '."

The amendment was duly seconded.

SRI S. M. ANNAMALAI : Mr. Speaker, Sir, I move—

' *Omit* the proviso to sub-clause (1) '.

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Mr. Speaker, Sir, I move—the amendment, namely—

" In sub-clause (1), *for* the provisos, *substitute* the following, namely :

' Provided that—

(i) in the case of wheat products (for example wheat flour, sooji and wheat bran), coconut, and potato, the rate shall be quarter per cent;

(ii) dealers dealing in fresh vegetables (other than those mentioned in the First Schedule), fresh fruits, betel and plantain leaves, flowers, eggs, meat and fish (other than canned meat and fish), shall not be liable to pay any tax '."

The amendment was duly seconded.

SRI M. KALYANASUNDARAM : Mr. Speaker, Sir, I move—

' *For* item (i) of the proviso to sub-clause (1), *substitute* the following, namely :—

" (i) In the case of foodgrains and perishable articles such as vegetables, milk, flowers, fresh fruits, plantain leaves, betels, eggs, meat and fish no sales tax shall be levied irrespective of turnover ".'

The amendment was duly seconded.

SRI N. MARUDACHALAM : Mr. Speaker, Sir, I move—

In item (i) of the proviso to sub-clause (1), *for* the words " the rate shall be one per cent ", *substitute* the words " the rate shall be half per cent ".

The amendment was duly seconded.

SRI V. SUBBIAH : Sir, I move—

In item (i) of the proviso to sub-clause (1), *omit* the word " flowers ".

The amendment was duly seconded.

SRI K. RAMACHANDRAN : Mr. Speaker, Sir, I move—

' In item (ii) of the proviso to sub-clause (1), *for* the words " thirty thousand ", *substitute* the words " fifty thousand rupees ".'

The amendment was duly seconded.

SRI S. NAGARAJA MONIGAR : Mr. Speaker, Sir, I move—

*After* item (ii) of the proviso to sub-clause (1), *add* the following item, viz. :

" (iii) the sale of milk and milk products by co-operative societies shall not be liable for any tax under this Act ".

The amendment was duly seconded.

SRI S. LAZAR : Mr. Speaker, Sir, I move—

" In the proviso to sub-clause (3), *omit* the words ' obtained from the prescribed authority '."

The amendment was duly seconded.

MR. SPEAKER : The amendment and the clause are before the House for discussion.

SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, என்னுடைய முக்கியமான திருத்தம் "டாக்ஸபிள் லிமிட்" ரூ. 10,000 என்று இருப்பதை 25,000 ரூபாய்க்கு உயர்த்த வேண்டுமென்பது தான். கனம் மந்திரி அவர்கள் நேற்றைய தினம் சொன்னார்கள், முன்பு இருந்ததைவிட இப்பொழுது வியாபாரிகளுக்கு அதிகமாக வருமானம் வருகிறது, அதனால் அதிகப்படியான வரி கொடுத்தால் சகங்டம்

12th February 1959] [Sri N. K. Palanisami]

இல்லை என்று. ஆனால், " காஸ்டு ஆப் லிவ்விங் இன்டெக்ஸை " எடுத்துக் கொண்டால், இன்றைக்கு இருக்கக்கூடிய வியாபாரத்திலுள்ள போட்டியை எடுத்துக்கொண்டால், இன்று வரக்கூடிய லாபம் கணிசமான அளவு இல்லை. அதுவும் " டாக்ஸபிள் லிமிட் " 10,000 ரூபாய் என்று வைத்தால் சிறு சிறு வியாபாரிகளுக்கும், கடைக்காரர்களுக்கும் பெருத்த நஷ்டம் உண்டாகும். சர்க்காருக்கு வரி குறையக் கூடாது என்பது தான் எல்லோருடைய அபிப்பிராயமும். ஆனால் இன்றையதினம் எங்கு அதிகப்படியான வியாபாரம் நடக்கின்றதோ, அவ்விடத்தில் சரியான முறையிலே வரி வசூல் செய்யவில்லை என்பதைத் தான் நான் குறிப்பிட விரும்புகிறேன். அன்றைக்கு சில உதாரணங்கள் கொடுத்தேன். இன்றைக்கும் சில உதாரணங்கள் கொடுக்க வேண்டுமென்று விரும்புகிறேன். பல பேர்கள் எந்த விதமான கடையும் இல்லாமல் வெறும் காகிதத்தில் எழுதியே பல சாமான்களை ஸேல்ஸ் செய்துகொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கும் வரும் கமிஷன் பேபரில் இருக்கும். ஆனால் சர்க்காருக்கு கணக்கு வராது. வெளி நாட்டிலிருந்து எலக்ட்ரிக் மோட்டார் போன்ற பல சாமான்கள் இறக்குமதியாகின்றன. 25 எச். பி. மோட்டார் விலை கண்ட்ரோல் ரேட் ரூ. 3,500 என்றால், மார்க்கெட் ரேட் ரூ. 7,000 ஆக இருக்கிறது. ஆனால் அந்த " இம்போர்டர் " என்ன சொல்வார் என்றால் மேலும் 3,500 ரூபாய் கொடுத்தால் தான் மோட்டார் கிடைக்கும் என்று கூறுவார். (ஸ்ரீ எஸ். எ. எம். அண்ணாமலை உடையார் தலைமை வகித்தார்) மற்றபடி யார் கேட்டாலும் இல்லை என்று சொல்லி விடுவார். அந்த உபரியாக வரக்கூடிய 3,500 ரூபாய்க்கு கணக்கு விவரம் வராது. அதற்கு வருமான வரி வேறு கட்ட வேண்டியதாக இருக்கும். விற்பனை வரியும் கட்ட வேண்டியதாக இருக்கும். இது மாதிரி பல சந்தர்ப்பங்களில் எடுத்துக் கொண்டால் பல ஆயிரக்கணக்கான ரூபாய்கள் கணக்குக்கே வராது. இருக்கும் அதிகாரத்தை சரியான முறையில் பிரயோகித்து பெரிய பெரிய வியாபாரிகளிடமிருந்து வரியை வசூலிக்க வேண்டும். இப்படி இன்னும் 2, 3 மடங்கு அதிகப்படியாக விற்பனை வரியை வசூலிக்கக் கூடிய சந்தர்ப்பம் இருந்தும், சிறு வியாபாரிகளிடம் கொடுமையான முறையில் வரியை வசூலிக்கக்கூடாது என்பது தான் என்னுடைய வாதம். சாதாரணமாக 10,000 ரூபாய்க்கு வியாபாரம் செய்யக்கூடிய சிறிய வியாபாரிகளும் பல விதமான கணக்குகளை வைத்துக்கொள்ள வேண்டிய சங்கடமான நிலைமை இருக்கிறது. இது குறித்து வியாபாரிகள் அனைவரும் ஹர்த்தால் நடத்தி கண்டித்தார்கள் என்பதை அமைச்சர் அவர்களின் ஞாபகத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். நமது ராஜ்யம் பூராவும் வியாபாரிகள் இரண்டு வருஷத்திற்கு முன்பே " டாக்ஸபிள் லிமிட்டை " 25,000 ரூபாய்க்கு உயர்த்த வேண்டுமென்று வற்புறுத்தியிருக்கிறார்கள். ஆகவே இதை 25,000 ரூபாய்க்கு உயர்த்த வேண்டுமென்ற என்னுடைய திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

(உதவி சபாநாயகர் தலைமை வகித்தார்.)

அடுத்தப்படியாக, உணவுப்பொருள்களைப் பற்றி குறிப்பிட விரும்புகிறேன். சிறு சிறு விவசாயிகளாக இருப்பவர்கள் தாங்கள் உற்பத்தி செய்த பொருள்களைத் தாங்களே சாப்பிடுவதற்கு வைத்துக்கொள்ள முடிவதில்லை. அவர்கள் விவசாயத்திற்காக கடன் வாங்குகிறார்கள். பிறகு உற்பத்தி செய்த உடனே அந்தப் பொருள்களை கடனைத் திருப்பிக் கொடுப்பதற்காக விற்றுவிடும் நிலைமையில்தான் இருக்கிறார்கள். மற்றபடி 6, 8 மாதங்களுக்கு தங்களுக்கு வேண்டிய பொருள்களை சந்தையில் தான் வாங்கிக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே, எல்லோரும் அரிசியை வாங்கித் தான் சாப்பிடுகிறார்கள். அவர்கள் கண்டிப்பாக விற்பனை வரி கொடுக்க வேண்டியிருக்கும். ஆகவே அவர்கள் சாப்பிடுவதற்காக வாங்கும் உணவுப் பொருள்களுக்கு வரி கொடுக்கக்கூடாது. " ரைஸ் அண்டு வீட் ப்ராடக்ட்ஸ் " இவைகளுக்கு வேண்டுமானால் 30,000 ரூபாய்க்கு மேல் ¼ சத விதம் வரி போட்டுக் கொள்ளலாம் என்பது தான் என்னுடைய திருத்தம். இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

[12th February 1959

***Sri A. GOVINDASAMY** : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, என்னுடைய திருத்தத்தை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ளுவார்கள் என்று நினைக்கிறேன், காரணம் நான் இந்த "டாக்ஸபிள் லிமிட்டை" 20,000 ரூபாய்க்குத்தான் உயர்த்த வேண்டுமென்று கேட்டிருக்கிறேன். இது அதிகமான தொகை இல்லை. 10,000 ரூபாய் என்று இருந்தால் அது சாதாரண மத்தியதர வியாபாரிகளைப் பாதிக்கும். சில சமயங்களிலே விற்பனை வரி உத்தியோகஸ்தர்களுக்கு சிறு வியாபாரிகளைப் பிடிசகா விட்டால் உத்தேசமான தொகை குறிப்பிடுகிற நேரத்திலே அதிகமாக வியாபாரம் நடந்ததாக குறிப்பிடுவார்கள். அம்மாதிரி பார்க்கும்போழுது வருஷத்திற்கு 10,000 ரூபாய் வியாபாரம் நடக்கிறது என்று குறிப்பிட்டால் சிறு வியாபாரிகள் சங்கடப்படுவார்கள். ஆகையால்தான் இந்த லிமிட்டை 20,000 ரூபாய்க்கு உயர்த்தவேண்டுமென்று நான் திருத்தம் கொடுத்திருக்கிறேன். இந்த சாதாரண திருத்தத்தை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ளுவார்கள் என்று நினைக்கிறேன்.

என்னுடைய 24-வது திருத்தத்தில் 2 சதவிகித வரியை ஒரு சதவிகிதமாக மாற்றவேண்டுமென்று கேட்டிருக்கிறேன். அதுவும் அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ளக்கூடிய ஒரு திருத்தம்தான்.

கடைசியாக என்னுடைய 25-வது திருத்தத்தில் உணவுப் பொருள்களின் மீது விதித்திருக்கக்கூடிய வரியை அறவே ரத்து செய்யவேண்டுமென்று குறிப்பிட்டிருக்கிறேன். கிராமத்திலுள்ள விவசாயிகள் அவர்களே உற்பத்தி செய்து அவர்களே சாப்பிடுவதாக அமைச்சர் அவர்கள் நேற்றைய தினம் கூறியதாக ஸ்ரீ என். கே. பழனிசாமி அவர்கள் பேசியதிலிருந்து தெரியவருகிறது. 'ப்ரொவிஸோ' ஒன்றில் குறிப்பிடப்பட்டிருக்கிற சோளம், கம்பு, ராகி, தினை, வரகு, சாமை இவைகளெல்லாம் கிராமத்திலேயே உற்பத்தியாகி அப்படியே கிராமத்திலேயே செலவாகிற நிலைமையில் இல்லை. அவைகள் நகர்ப்புரங்களுக்கு வியாபாரத்திற்கு வருகின்ற நிலைமைதான் இருக்கிறது. ஏழை எளியவர்கள் கிராமத்தில் மட்டுமல்ல, நகர்புரங்களிலும் இருக்கிறார்கள். ஆகையால் ஏழை எளியவர்கள் உபயோகப்படுத்துகின்ற உணவு தானியங்களுக்கு வரியை ரத்து செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். நேற்று காங்கிரஸ் உறுப்பினர் ஒருவர் நெல்லுக்கு வரி போடவேண்டியதில்லை, அரிசிக்கு மட்டும் வரி போட்டால் போதும் என்று குறிப்பிட்டதாகத் தெரிகிறது. அதுவும் உணவு தானியமாக இருப்பதின் காரணத்தினாலே அதற்கும் வரியை அறவே நீக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஆகவே உணவு விஷயத்தில் நிச்சயமாக விதிவிலக்கு அளிக்கலாம். இதைப்பற்றி மீண்டும் ஆலோசித்துப்பார்க்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் பாலுக்கு வரி போடக்கூடாது என்று சொன்னேன். இதைப்பற்றி கேள்வி நேரத்தில் சொன்னபோது வரி போட்டாலும் பாலாறும், தேனாறும் ஓடும் என்று அமைச்சர் அவர்கள் பதில் சொன்னார்கள். இப்போது பாலாற்றில் கூட தண்ணீர் ஓடவில்லை என்பதை அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். அதோடு அழுகிப்போகின்ற பொருட்களாக இருக்கின்ற முட்டை, வெற்றிலை, பூ இவற்றிற்கும் விதிவிலக்கு அளித்தால்தான் இந்த அரசாங்கம் ஏழைகளுக்கு நன்மை செய்ததாக இருக்கும் என்பதைச் சொல்லிக்கொள்கிறேன். இம்மாதிரிப்பட்ட வியாபாரத்தில் 30 ஆயிரத்திற்கு மேற்பட்டு வியாபாரம் நடந்துவிடாது என்று அமைச்சர் அவர்கள் கூறினார்கள். அந்த வியாபாரம் எவ்வளவு நடந்தாலும் உணவுப்பொருள் என்ற அடிப்படையில் உணவுப்பொருட்களுக்கும் முட்டை, வெற்றிலை, பூ போன்ற பொருட்களுக்கும் விதிவிலக்கு அளிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். ஆகவே இதைப்பற்றி அமைச்சர் அவர்கள் நன்றாக ஆலோசித்துப் ப்ரவிஸோ 1-யை நீக்கிவிடும்படி கேட்டுக்கொள்கிறேன்.

**Sri S. M. ANNAMALAI** : சட்டமன்ற உதவித் தலைவர் அவர்களே, நான் கொடுத்திருக்கக்கூடிய 22-வது திருத்தமானது, 20 ஆயிரம் ரூப ய்க்கு மேற்பட்டு வியாப ரம் செய்கின்றவர்களுக்கு மாத்திரம் வரி போட வேண்டும் என்று கேட்டுக்கொள்வதுதான். இதைக்குறித்து நான் இதற்கு முன்பே

குறிப்பிட்டிருக்கிறேன். சாதாரணமாக கிராமப்புறங்களில் இரண்டு மூட்டை நெல்லை வாங்கிக்கொண்டு போய் அதை அரிசியாக்கி பஜாரில் கொண்டு வந்து விற்றால்தான் ஒரு ரூபாய் அல்லது இரண்டு ரூபாய் என்று அன்றாட வயிற்றுப்பிழைப்புக்கு கிடைக்கும். அப்படிப்பட்டவர்கள் கூட இப்போது நிர்ணயித்திருக்கும் 10 ஆயிரம் ரூபாய்க்கு மேற்பட்டு வியாபாரம் செய்கின்றவர்கள் வரி கொடுக்கவேண்டும் என்று சொல்லக்கூடிய அடிப்படையில், வரி கொடுக்கவேண்டிய நிலைமையில் வர வேண்டியிருக்கிறது. ஆகவே இதனால் கிராமப்புறத்திலுள்ள மக்கள் இதனால் பாதிக்கக்கூடாது என்ற அடிப்படையின் பேரில் இப்போது 10 ஆயிரம் என்று நிர்ணயித்திருப்பதை 20 ஆயிரம் என்று உயர்த்த வேண்டும் என்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். இதை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக நான் கொடுத்திருக்கக்கூடிய 25-வது திருத்தம் உணவுப் பொருள்களுக்கு வரிபோட்டிருப்பதை எடுக்கவேண்டுமென்பது. நேற்றைய தினம் அமைச்சர் அவர்கள் பேசுகின்றபொழுது 100-க்கு 20 பேர்கள்தான் இந்த வரியினால் பாதிக்கப்படுவார்கள் என்றும், அதிலும் கிராமப்புறங்களில் இருக்கின்ற மக்கள் இதனால் பாதிக்கப்படமாட்டார்கள் என்றும் கிராமப்புற மக்கள் தங்களுக்கு வேண்டிய உணவைக் கூலியாகவே பெற்றுக்கொள்கிறார்கள் என்றும் நகரப்புறங்களில் இருக்கும் மக்கள்தான் இந்த வரியைக் கொடுக்கவேண்டியிருக்கும் என்றும் குறிப்பிட்டார்கள். அதன்படி பார்த்தாலும் கூட 100-க்கு 20 பேர்கள் வரி கொடுக்க வேண்டியிருப்பதில் 100-க்கு இரண்டு பேர்கள்தான் பணக்காரர்களாக இருக்கிறார்கள். பாக்கியுள்ள 18 பேர்களும் பெரிய உத்தியோகஸ்தர்கள் அல்ல, மத்தியதர வர்க்கத்தினர்கள்தான். ஆகவே அவர்கள் மீது வரி போடுவது என்பது சரியாகாது. அதிலும் குறிப்பாக அமைச்சர் அவர்கள் பேசுகின்ற பொழுது பாமர மக்களை இந்த வரி பாதிக்காது என்று குறிப்பிட்டார்கள். அதைப்பார்த்தால் இன்றைக்கு அரிசி வாங்குபவர்கள்தான் நகரத்தில் அதிகமாக இருக்கிறார்கள். ராகி, சோளம், கம்பு முதலிய உணவுப்பொருட்கள் வாங்கி உபயோகிக்கின்றவர்கள் அதிகமாக கிராமப் புறங்களில்தான் இருக்கிறார்கள் என்றும் குறிப்பிட்டேன். இதைப்பற்றி அமைச்சர் அவர்கள் சரியான பதில் சொல்லவில்லை. அதிகமாக கிராமப் புறங்களில் இருக்கின்ற மக்கள் ஒரு மாதத்தில் 20 நாட்கள் புஞ்சை தான்யங்களைத்தான் உபயோகித்து வருகிறார்கள். இதை யாரும் மறுக்க முடியாது. ஆகவே இப்பேர்ப்பட்ட தான்யங்களின் மீது வரி போட்டு வருவாயை அதிகப்படுத்த வேண்டும் என்கின்ற முறை நல்லது அல்ல. ஆகவே, புஞ்சை தான்யங்களின் மீது போடப்பட்டிருக்கின்ற வரியையாகிலும் நீக்கவேண்டும் என்று அமைச்சர் அவர்களை தாழ்மையோடு, பணிவோடு, கேட்டுக்கொள்கிறேன். அமைச்சர் அவர்கள் தயவு கூர்ந்து கருணை கூர்ந்து, நல்ல முறையில் இதைப்பற்றி சிந்தித்துப்பார்த்து, தெளிவாக இதைப் பற்றி ஆலோசித்துப்பார்த்து, இதன்மேல் போடப்பட்டிருக்கும் வரிகளை நீக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்வதோடு என் திருத்தங்களையும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

**Sri K. RAMACHANDRAN :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நான் கொடுத்திருக்கும் 22-வது திருத்தம், இப்போது நிர்ணயிக்கப் பட்டிருக்கும் 10 ஆயிரம் என்று இருப்பதை 20 ஆயிரம் ரூபாய் என்று மாற்றி, அதுவரைக்கும் விதிவிலக்கு அளிக்கவேண்டும் என்பதுதான். மற்ற அங்கத்தினர்கள் இதைப்பற்றி சொன்னார்கள். அவர்கள் சொல்லாமல் இருந்த ஒரு விஷயத்தைப்பற்றி மாத்திரம் நான் சொல்ல விரும்புகிறேன். நேற்றைய தினம் அமைச்சர் அவர்கள் பேசுகின்ற நேரத்தில் இந்த வரம்பை உயர்த்தினால் வியாபாரிகள் வியாபாரத்தைப் பிரித்து அதிகமான கடைகளை வைத்து வியாபாரம் செய்ய ஆரம்பித்துவிடுவார்கள் என்று சொன்னார்கள். அந்த வாதம் பொருத்தமற்றது என்பதைதான் நான் சொல்ல ஆசைப்படுகிறேன். இன்றைக்கு நிர்ணயிக்கப்பட்டிருக்கும் 10 ஆயிரம் ரூபாய் ஆண்டு ஒன்றுக்கு வியாபாரம் நடத்துவது என்று சொன்னால், தினம் ஒன்றுக்கு 27 ரூபாய்க்கு வியாபாரம் நடக்க வேண்டும் 20 ஆயிரம் என்று நிர்ணயித்தால் 54 ரூபாய்க்கு தினசரி வியாபாரம் நடக்க வேண்டும். இவ்விதம் வியாபாரம் நடந்தால் தினசரி 3½ ரூபாயிலிருந்து

4 ரூபாய் வரைக்கும் லாபம் கிடைக்கும் என்று எதிர்பார்க்கலாம். ரூபாய்க்கு ஒரு அணு லாபம் என்று வைத்துக்கொண்டாலும் கூட இதற்கு மேல் அவர்களுக்கு லாபம் கிடைக்காது. இந்த நிலைமையில் அவர்கள் கடைகளை இரண்டாகவோ அல்லது மூன்றாகவோ பிரித்து வைத்து வியாபாரத்தை நடத்துவார்கள் என்று சொன்னால் அது ஏற்றுக்கொள்ளத்தக்க தல்ல. ஆகவே வரியில்லாமல் வியாபாரம் நடத்துகின்ற வரம்பை 20 ஆயிரம் என்று உயர்த்துவதினால் வியாபாரத்தை பிரித்து நடத்த ஆரம் பித்து விடுவார்கள் என்று சொல்லுவது சரியாகாது என்பதை சொல்லிக் கொள்கிறேன். ஆகவே சிறிய வியாபாரிகளை பாதிக்காத அளவில இந்த வரம்பை 10 ஆயிரத்திலிருந்து 20 ஆயிரம் என்று உயர்த்த வேண்டும் என்று கொடுத்திருக்கக்கூடிய திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக உணவுப் பொருள்கள் மீது வரி கொடுக்கின்ற விஷயத்தில், இதனால் 20 சதமானம் பேர்கள்தான். பாதிக்கப்படுகின்றார்கள் என்று சொல்லப்பட்டது. அதோடு நகரப்புறங் களில் இருக்கின்றவர்கள்தான் இதனால் பாதிக்கப்படுவார்கள் என்றும் சொல்லப்பட்டது. அவ்விதமே நகரப்புறங்களை எடுத்துக்கொண்டாலும் கூட இன்றைக்கு அதிகமாக நகரப்புறங்களில் இருப்பவர்கள் மத்தியதர வர்க் கத்தினர்தான். ஆகவே உணவுப் பொருள்களை அதிகமாக வாங்குகின்ற மத்தியதர வர்க்கத்தினர் மீது வரி போடாமல் இருப்பதுதான் கடமையாக இருக்கவேண்டும் என்பதையும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அது சாத்தியமில்லை என்று கருதினால், குழந்தைகளுக்கு அவசியப்படுகிற பால் போன்ற பொருள்களின் மீது போடப்பட்டிருக்கும் வரியையாவது எடுத்து விட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக அழுகிப் போகின்ற பொருட்களுக்கு நிர்ணயித்திருக்கும் தொகை 30 ஆயிரம் என்றிருப்பதை மாற்றி 50 ஆயிரம் என்று நிர்ணயிக்க வேண்டும் என்ப தாகும். இதில் சில பொருள்கள்தான் ஒன்றிரண்டு நாட்கள் இருக்கக் கூடியவை. இதில் ஒரே நாளில் கெட்டுவிடக்கூடிய பல பொருள்களும் இருக்கின்றன. ஆகவே இதற்கு நிர்ணயித்திருக்கும் 30 ஆயிரம் ரூபாய் என்று இருப்பதை 50 ஆயிரம் வரம்பு என்று உயர்த்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதற்காக கொடுத்திருக்கும் திருத்தங்களை யும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI K. SATTANATHA KARAYALAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இதில் தீர்வையில்லாமல் வியாபாரம் செய்வது 10 ஆயிரம் ரூபாய் வரையிலும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதை அதிகமாக்க வேண்டும் என்பதுதான் என்னுடைய திருத்தம். இதில் நிர்ணயித்திருக்கும் 10 ஆயிரம் ரூபாய் என்பது மிக மிக குறைவு, இன்றைக்கு விலைவாசி முன்னால் இருந்ததை விட மூன்று நான்கு மடங்கு உயர்ந்திருக்கிறது, என்கின்ற புள்ளிவிவரங்கள் நேற்று இங்கே சொல்லப்பட்டது. அப்படி யிருக்க, இப்போதிருக்கும் விலைவாசியின் அடிப்படையில் பார்த்தால் 20 ஆயிரம் என்று நிர்ணயித்தால் அது நியாயமாக இருக்கும். இவ்விதம் இந்த வரம்பை உயர்த்துவதினால் "ரேட் ஆப் டாக்ஸேஷன்"-க்கு எந்த விதமான பாதகமும் ஏற்பட்டு விடாது. இந்த வரியின் மூலம் சர்க்கார் சுமார் 11 கோடி ரூபாய் எதிர்பார்க்கின்றார்கள். இப்போது இருக்கின்ற கணக் கின் பிரகாரம் 10 ஆயிரம் ரூபாயிலிருந்து 25 ஆயிரம் ரூபாய்வரை மொத்த வியாபாரம் உள்ளவரிடமிருந்து கிடைக்கும் வருமானம் 7·4 சத மானமும், 25 ஆயிரத்திலிருந்து 50 ஆயிரம் வரை 6·8 சதமானமும் 50 ஆயிரத்திற்கு மேற்பட்டவர்களிடமிருந்து 85·8 சதமானமும் தீர்வை கிடைக்கின்றது என்று தெரிகிறது. இந்த அடிப்படையில் பார்த்தால் இந்த திருத்தத்தின் மூலமாக 8 சதமானம்தான் வித்தியாசப்படும். இதனால் பெரிய பாதகம் ஒன்றும் ஏற்பட்டு விடாது. அதோடு "கலக்ஷன் ஆப் டாக்ஸ்"-க்கு ஏற்படும் செலவும் ஓரளவு குறையும். இன்று இருக்கும் நிலைமையில் கிராமங்களில்கூட சிறு சிறு வியாபாரிகளிடம் வரியை வசூலிப்பதற்காக உத்தியோகஸ்தர்களை நியமிக்க வேண்டியிருக்கும். இதனால் செலவு அதிகமாகும். ஆகவே இந்தத் திருத்தத்தை அவசியம் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

12th February 1959] [Sri K. Sattanatha Karayalar]

(Mr. Speaker in the Chair.)

அடுத்தப்படியாக, அழுகிப் போகக்கூடிய பொருள்களுக்கும், உணவுப் பொருள்களுக்கும் விதி விலக்கு அளிக்கவேண்டுமென்று அமைச்சர் அவர்களை மன்றாடி வேண்டிக்கொள்கிறேன். இதிலே வரக்கூடிய வருமானம் 50 லட்சத்துக்கும் குறைவாகத்தான் இருக்கும். உணவுப் பொருள்களின் விலைகள் ஏறுமுகமாக இருக்கக்கூடிய கால கட்டத்தில், உணவுப் பொருள்களுக்கு விதி விலக்குக் கொடுத்து வரி வஜா செய்து கொடுப்பது மக்களுக்கு மிகவும் நன்மை பயப்பதாக இருக்கும். ஆகையால் உணவுப் பொருள்களுக்கு வரி போடாது, அதையும் சர்க்கார் அங்கீகரிக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்கிறேன். 11-00 a.m.

* SRI N. MARUDACHALAM : கனம் சபாநாயகர் அவர்களே, என்னுடைய திருத்தமானது 10,000 ரூபாய்க்கு மேல் இருந்தால் வரி போட வேண்டுமென்று இருப்பதை 30,000 ரூபாய்க்கு மேல் இருந்தால் வரி போட வேண்டுமென்று மாற்றுவதற்காகத்தான். 30,000 ரூபாய் என்று இருந்தால்கூட கடை வாடகை, போக்குவரத்துச் செலவு இதற்கே வரக்கூடிய லாபம் போதுமானதாக இருக்காது. ஆகையால் 30,000 ரூபாயே குறைவு. இருந்தாலும், இப்போது உள்ளதை 30,000-ஆக உயர்த்த வேண்டுமென்று கொடுத்திருக்கக்கூடிய திருத்தத்தை ஒப்புக்கொள்ள வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

SRI M. JAGANNATHAN : Mr. Speaker, Sir, I rise to speak on the amendments which I have given notice of with a certain amount of diffidence, because I feel that the Hon. Minister replying to the general discussion on this General Sales-Tax yesterday gave an incling of his mind which went to show that he had made up his mind already about some of these matters. However, Sir, for what they are worth, I would like to say one or two words about my amendments and try to press them hard so that the Government might realise the sanctity or correctness about them and change their mind and make an attempt to accept them.

Sir, in the first place, my amendment says that the exemption limit of Rs. 10,000 must be raised to Rs. 20,000. Several hon. Members have spoken emphasising the fact that this exemption level must be raised to Rs. 20,000, or even Rs. 25,000 and they have given very valid, valuable and convincing reasons, saying that this will affect the vast majority of the businessmen, traders and dealers who will be constrained to keep accounts and also maintain one or two clerks in order to see that their accounts are properly maintained for which purpose they will have to pay them handsomely as otherwise the clerks might desert these businessmen and traders, or they might try to keep false accounts and useless accounts which might land these people into trouble. Moreover, the majority of these businessmen, traders and dealers being half-educated or illiterate persons in our State, they may not be in a position to keep correct accounts and thus this will work a great hardship on these poor people. Therefore, if this exemption limit is raised to Rs. 20 or Rs. 25,000, a considerable number of traders, etc., would be excluded and businessmen who have got very big turn-over would alone be affected by this legislation and that is why I request the Hon. Minister to accept this amendment and increase the exemption limit from Rs 10,000 to Rs. 20,000.

[Sri M. Jagannathan] [12th February 1959

Sir, the other amendment which I have proposed is with reference to the exemption of foodgrains and perishables like flowers, vegetables, milk and so on and so forth. Sir, yesterday, the Hon. Minister was vaxing eloquent, shall I say,—(Interruption.) even on prior occasions—about the question of giving exemption to these foodgrains and perishables. He said that most of these villagers living in villages do not take to these foodgrains, such as cholam, ragi, and then cumbu and varagu, samai, kuthiraivali and so on and so forth and that they all switched on to eating rice alone. But this statement of the Hon. Minister is contradicted by facts. If only the Hon. Minister has kept in touch with these village folks, he will not have ventured to come forward with a statement of that type, because I still feel that most of our village folks do eat these ordinary varieties of foodgrains like cumbu, cholam, ragi, samai, thinai, kuthiraivali, etc., because they cannot afford to purchase rice which has to be bought at costly and dear price by these people. Therefore, if you begin to impose one per cent of tax on these, say, cheap foodgrains, I am afraid that will hit hard upon those village folks.

Further, the Hon. Minister made another statement and he said that this imposition of 1 per cent of sales-tax on these foodgrains will not affect the rise in prices. It was a boastful claim, I should say. Because, it is common knowledge and it does not need great financial experts or fiscal authorities to come and tell us that imposition of this kind of indirect tax will result in passing the incidence of taxation to the consumer ultimately. There are two varieties of taxes—the first the direct tax and second, the indirect tax. Now you know what is the meaning of direct tax. When direct tax is levied, the incidence falls where it is levied, whereas in the case of indirect tax, the incidence is passed on to the consumer ultimately. Here even though the sales-tax is purported to be levied on the dealer or trader as such, ultimately, the incidence is borne, the burden of this tax is borne by the consumer; it is the poor man, the man in the street who will have to bear this tax. Sir, it is really amazing how the Hon. Minister came forward to say that this tax does not go to contribute to the rise in prices which is absolutely contradicted by facts, in my opinion. (Interruption.) It is not the only reason; but one of the reasons and a weighty reason at that.

Therefore, Sir, the Hon. Minister should revise his opinion and accept the arguments coming from the hon Members of the Opposition emphasising the fact that the sales-tax goes to increase the rise in prices of foodgrains. Sir, for these reasons (Interruption.), yes, to some extent. It is for the Government to see to what extent and it is their business; it is not my business.

THE HON. SRI R. VENKATARAMAN : I am afraid, Sir, the hon. Member was either not present or was not able to understand what I said. I said that the incidence of the tax on the consumer

12th February 1959] [Sri R. Venkataraman]

at the rate of 1 per cent worked out to less than one naya Paisa per Madras measure and therefore it was negligible; I never said that it did not pass on to them.

SRI M. JAGANNATHAN : It may be negligible from the point of view of the Government, but when it comes to a question of paying this tax, the poor man feels it. The Government may not feel it, but the poor man feels it. We know the majority of the people are living a life of nothing, on starvation level and they do not know where their next meal would come from. That is the state of affairs in our country. They are the consumers and they have to bear the burden of this tax ultimately. That is why I emphasise that this 1 per cent purported to be levied on foodgrains—at least on staple foodgrains—must be given up. Without contributing to further heat on this subject, I request the Hon. Minister to accept our arguments and accept our amendments. Thank you, Sir.

11-10 a.m.

SRI S. LAZAR : கனம் சபாநாயகர் அவர்களே, நான் கொடுத்திருக்கக்கூடிய 34-வது திருத்தத்தைப் பற்றி முதலில் குறிப்பிட விரும்புகிறேன். 3-வது பிரிவிலே, 3-வது உப பிரிவின்கீழ் இருக்கக்கூடிய ப்ரொவைஸோவில் கடைசியாக இருக்கக்கூடிய வார்த்தைகளான "அப்டெயின்ட் ப்ரம் தி ப்ரிஸ்க்ரைப்ட் அதாரிட்டி" என்று இருக்கக்கூடிய வார்த்தைகள் அவசியமில்லை என்று நான் சொல்லியிருக்கிறேன். காரணம், இந்தச் சட்டம் கொண்டுவந்ததனுடைய முக்கியமான நோக்கம், எந்த அளவுக்கு வியாபாரிகளுக்குத் தொல்லை இல்லாமல் செய்ய முடியுமோ, அந்த அளவுக்கு நாம் செய்ய வேண்டும் என்ற நோக்கத்தோடுதான். அப்படிப் பார்க்கும்போது, ஒரு டூனே வரி சம்பந்தப்பட்ட பொருள்களுக்கு, அதிலேயும் ஒரு பொருள் மற்றொரு பொருளிலே இருக்கும் பகுதியாக அமையுமானால், அந்தப் பொருளுக்கு ஒரு சத விகிதம் மட்டுமே வரி கொடுத்தால் போதும் என்ற முறையிலே மூன்றாவது பிரிவு அமைந்திருக்கிறது. ஒரு சத விகிதம் மட்டும் வரி செலுத்த வேண்டுமென்ற நோக்கம் இருக்கும்போது அதற்கான குறிப்பிட்ட ஒரு 'பார'த்திலே அதைப் பூர்த்தி செய்து, அலுவலருக்கு, அதாவது அஸெஸிங் அதாரிடிக்குக் கொடுக்க வேண்டும் என்ற முறையிலே மூன்றாவது பிரிவின் மூன்றாவது ப்ரொவைஸோ அமைந்திருக்கிறது. 'பார'த்திலே இருக்கவேண்டியது அவசியமே தவிர, அந்த பாரத்தை அந்த அதிகாரியிடமிருந்துதான் வாங்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. நம்முடைய நோக்கம், குறிப்பிட்ட ஒரு பாரத்திலே இருந்தால் அதிகாரிகளுக்குச் சௌகரியமாக இருக்கும், கணக்கைப் போடுவதற்கோ, அலுவலக வேலைகளைச் செய்வதற்கோ. ஆனால், அதற்குப் பதிலாக ஒவ்வொரு தடவையும் இந்த விதி விலக்கு வேண்டுமென்று சொல்லும்போது, ஒரு சத விகிதம் மட்டுமே வரி கொடுக்க வேண்டுமென்று வியாபாரி முடிவு செய்கின்றபோது, அவர் நேரடியாக இந்த அதிகாரியிடத்திலே வந்து பாரத்தையும் அவரிடத்திலிருந்து வாங்கித்தான் பூர்த்தி செய்ய வேண்டும் என்ற முறையிலே அமைந்திருப்பது அவசியம் இல்லை என்று நான் கருதுகிறேன். 'பார'த்திலே இருக்கவேண்டும் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். 'பார'த்தை யார் வேண்டுமானாலும் தயாரித்துக்கொள்ளலாம். குறிப்பிட்ட 'பார'த்திலே கணக்குக் கொடுக்க வேண்டுமென்று எத்தனையோ முறைகளில் அமைத்துக் கொடுத்திருக்கிறோம். ஆனால், அதே பாரத்திலேதான் இருக்கவேண்டும், அதுவும் அதிகாரிகளிடத்திலே வாங்கித்தான் பூர்த்தி செய்ய வேண்டும் என்று குறிப்பிடவில்லை. இது தவறாகச் சேர்க்கப்பட்டிருக்கும் என்று நம்புகிறேன். ஆகவே, **prescribed form obtained from the prescribed authority** என்ற நியதியை விலக்கவேண்டுமென்று நான் சொல்லக்கூடிய கருத்தை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை.

[Sri S. Lazar] [12th February 1959

மற்ற திருத்தங்களைப்பற்றி ஏனைய அங்கத்தினர்கள் பேசினார்கள். கனம் அமைச்சர் அவர்கள் பேசும்போது, நேற்றைய தினம் பல காரணங் களைக் குறிப்பிட்டார்கள். விதி விலக்கு கொடுக்க வேண்டியதன் உச்ச வரம்பை அதிகப்படுத்த முடியாது என்பதற்கும், இரண்டு சத விகிதம் தான் வலியுறுக்கப்படவேண்டும் என்பதற்கும் காரணங்களைக் குறிப்பிட்டார் கள். ஆனால், பெருவாரியான அங்கத்தினர்கள் நேற்றைய தினமும் இரண்டு நாள் விவாதத்திலும் இன்றையதினமும்கூட வற்புறுத்தி வருகிறார்கள் என்று சொன்னால் அதிலே ஒரு சிறிய தகவலை அரசாங்கம் கொடுத்தால், எல்லோருக்கும் ஒரு நியதி ஏற்பட முடியும். இந்த விதத் திலே சொல்லுவதற்குக் காரணம், டாக்டர் லோகநாதன் அவர்களுடைய ரிப் போர்ட்டிலே இதைப்பற்றி விவரமாக எடுத்துச் சொல்கிறார், ஒரு சத விகிதம் போட்டால் போதும் என்று. ஆனால், ஒரு சத விகிதம் போட்டால் எந்த அளவு நமக்கு வருமானம் குறைந்துவிடும் என்ற முறையிலே கனம் மந்திரி அவர்கள் புள்ளி விவரம் கொடுத்தால் கண்டிப்பாக நாம் எல்லோரும் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருப்போம். அங்கத்தினர்களுக்கு இருக்கும் சந்தேகமும் நிவர்த்தியாகிவிடும்.

ரூபாய் 25 ஆயிரம் வரையில் விதி விலக்கு வேண்டும் என்ற முறை யில் அவர்கள் கூறியிருக்கிறார்கள். அதைப்பற்றி டாக்டர் லோகநாதன் ரிப்போர்ட்டிலேதான் வாதம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, இந்தக் கருத்துக்களை ஏற்றுக்கொண்டால், எந்த அளவுக்கு அரசாங்கத்தினுடைய வருவாய் குறையும் என்பதைத் தெரிவிக்கவேண்டும். அங்கத்தினர்களு டைய நோக்கம்—அரசாங்கத்திற்கு வரவேண்டிய வருமானத்தை எந்த அளவிலேயும் குறைக்க வேண்டும் என்பது அல்ல. அந்தக் காரணத்திலே பார்க்கும்போது, எந்த அளவுக்கு நாம் பாதிக்கப்படுவோம் என்ற குறிப் பீட்டை அமைச்சர் அவர்கள் கொடுத்தால் உள்ளபடியே இவ்வளவு வாதத் திற்கு இடம் இருக்காது என்று கூறிக்கொண்டு 34-வது திருத்தத்தை கனம் மந்திரி அவர்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

**SRI M. KALYANASUNDARAM** : கனம் சபாநாயகர் அவர்களே, மூன்றாவது பிரிவு, இந்த மசோதாவுக்கே ரொம்ப முக்கியமானது. இதில் விதி விலக்கு எந்த அளவுக்குக் கொடுக்கப்படவேண்டும், வரி பல கட்ட விகிதாசாரத்தில் எந்த அளவு இருக்க வேண்டும் என்பது, உணவுப் பொருள்களுக்கு விதி விலக்கு கொடுக்க வேண்டுமா, வேண் டாமா என்பது எல்லாமே இந்த பிரிவுக்குள் வந்து விடுகின்றன. ஆத லால் இது முக்கியம் என்று குறிப்பிட்டேன்.

முதலில் சர்க்கார் விகிதாசாரம் வரையிலே என்ன கொள்கையைக் கடைப் பிடிக்கிறார்கள் என்றால் டாக்டர் லோகநாதன் சிபார்சு அடிப்படை யிலே இல்லை. எங்கே லோகநாதன் சிபாரிசு இவர்களுக்கு சாதகமாக இருக்கிறதோ, அதையெல்லாம் எடுத்துக் கொள்ளுகிறார்கள். விதி விலக்கு எந்த அளவுக்குக் கொடுக்கலாம் என்பதிலே பத்தாயிரம் ரூபாய் வரைக்கும் கொடுக்கலாம், அதற்கு மேல் மொத்தமாக வசூலிக்கக்கூடிய சலுகை 25 ஆயிரம் வரையில் கொடுக்கலாம் என்று எழுதியிருப்பதை அப் படியே எடுத்துகொண்டுவிட்டார்கள்.

பலகட்ட விற்பனை வரி விஷயத்திலே இரண்டு சத விகிதம் என்று சர்க்கார் கொண்டுவந்திருக்கிறார்கள். நேற்று பதிலளிக்கும் சந்தர்ப்பத் தில்கூட, இதற்குள்ள காரணத்தைப்பற்றி அமைச்சர் அவர்கள் சொல்லவே இல்லை. ஏற்கனவே முடிவு செய்யப்பட்ட ஒரு கொள்கை என்ற காரணத் தாலேயோ என்னவோ தெரியவில்லை. ஏன் இரண்டு சத விகிதம் விதிக்க வேண்டியிருக்கிறது என்பது பற்றி அவர்கள் பதில் கூறவில்லை. இப் போதாவது அவர் கூறவேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

காரணம், டாக்டர் லோகநாதன் வெகு ஆணித்தரமாகச் சொல்லி யிருக்கிறார். 1 சதவிகிதத்திற்கு மேலே போடுவது நியாயம் இல்லை என்று சொல்கிறார் :

12th February 1959] [Sri M. Kalyanasundaram]

**'As for the multi-point commodity, for reasons cited earlier, I am of the opinion that the prevailing rate of 2 per cent is too high'**

இரண்டு சத விகிதமாக வரி இருப்பது மிக அதிகம் என்று கூறியிருக்கிறார். அதோடு அவர் சொல்லுவதாவது :

**'I recommend that the general rate be reduced to 1 per cent. In making this recommen lation, I have taken full accouut of the revenue implications, and I am convinced that a decision by the Government that multi-point levy is to be kept always at a moderate level will go a long way in creating conditions for an effective and successful sales tax sy-tem'.**

ஒரு நிபுணரை நியமிக்கின்றோம். அவருக்கு ரொம்ப அனுபவம் உண்டு. அவருக்கு விஷயங்கள் அதிகம் தெரியும் என்று நியமிக்கின்றோம். அவர் இவ்வளவு திட்டவட்டமாகச் சொல்லியிருக்கிறார். இதனாலே வருமானம் பாதிக்கப்படாது என்ற அபிப்பிராயத்தைக் கொடுத்திருக்கிறார். அதோடு விற்பனை வரி சுமுகமாக அமுலில் இருக்க வேண்டுமானால், வர்த்தகர்கள், பொதுமக்கள் இவர்களுடைய ஒத்துழைப்பைப் பெற்று வசூலிக்கவேண்டுமானால் அது எவ்வளவு குறைவாக இருக்க வேண்டுமோ அவ்வளவு குறைவாக இருக்கவேண்டுமென்பதற்கான ஆதாரங்களை எடுத்துக் காட்டி, ஒரு சத விகிதம்தான் விதிக்க வேண்டும் என்று அவர் தெளிவாக யோசனை கொடுத்திருக்கும் சமயத்தில் இதை என் சர்க்கார் நிராகரிக்கிறார்கள் என்று என்றால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஒரு வருஷம் ஒரு சத விகிதம் என்ற விகதத்தில் வைத்துப் பார்க்க வேண்டும், அதன் மூலம், வரி விகிதம் குறைவாக இருக்கும் காரணத்தால், மறைக்க வேண்டும் என்ற எண்ணம் இல்லாமல் எல்லா வியாபாரிகளும் தாங்கள் செய்யும் வியாபாரம் பூராவுக்கும் கணக்குக் கொடுக்க சந்தர்ப்பம் ஏற்படும். அதன் பிறகு வருவாய் இல்லை என்று கருதினால் வரி விகிதத்தை உயர்த்தினால்கூட ஓரளவு புரிந்துகொள்ள முடியும். இரண்டு சத விகிதம் என்று கொண்டுவந்திருப்பது நியாயம் இல்லாதது என்பது என்னுடைய அபிப்பிராயம். ஒரு சத விகிதமாகக் குறைக்க வேண்டும் என்பதற்காக நான் ஒரு திருத்தம் கொடுத்திருக்கிறேன்.

விதி விலக்குக் கொடுப்பதை பத்தாயிரம் என்பதை 25 ஆயிரமாக உயர்த்தவேண்டுமென்று நான் ஒரு திருத்தம் கொடுத்திருக்கிறேன்.

மூன்றாவதாக நான் கொடுத்திருக்கும் திருத்தத்திலே உணவுப் பொருள்களுக்கும் காய்கறி, புஷ்பம், வாழையிலை போன்ற பொருள்களுக்கும் விதி விலக்கு கொடுக்க வேண்டும் என்பது. காய் கறிகள், பழம், புஷ்பம் இவையெல்லாம் ஏற்கனவே விதி விலக்கு கொடுக்கப்பட்ட பொருள்கள். அவைகளை மீண்டும் வரி விதிப்புக்குள் கொண்டு வருகிறார்கள். அதற்குரிய காரணம் என்ன ? சர்க்காருக்கு வருமானம் வேண்டுமென்ற காரணத்தைத் தவிர வேறு எந்த வித காரணமும் இருக்க முடியாது. புஷ்பம், காய் கறி, இலை போன்ற பொருள்களுக்குக் கண்டிப்பாக விதி விலக்கு கொடுக்க வேண்டும். கொடுக்க முடியாவிட்டால், 50 ஆயிரம் ரூபாய்க்கு மேல் வரி விதிப்பது என்று உயர்த்தவேண்டுமென்பதற்கு இரண்டு திருத்தங்களைக் கொடுத்திருக்கிறேன். அவைகளை ஆலோசனை செய்ய வேண்டும்.

உணவுப் பொருள்களிலே கடலை, வறுகடலை இவையெல்லாம் சேர்க்கப்படவில்லை. அவற்றை உணவுப் பொருள்களிலே சேர்க்கவேண்டும் ; பருப்பு வகையிலே சேர்த்து அதிகமாக வரி விதிக்கிறார்கள். அவற்றை உணவுப் பொருளிலே கொண்டுவரவேண்டுமென்று நான் யோசனை தெரிவிக்கிறேன்.

[Sri M. Kalyanasundaram] [12th February 1959

உணவுப் பொருளுக்கு ஏன் ஒரு சத விகிதம் வரி விதித்திருக்கிறார்கள் என்று கேட்டதற்குச் சமாதானம் கூறும் சமயத்தில், "உணவுப் பொருளுக்கு வரி செலுத்தக் கூடியவர்கள் பெரும்பாலும் நகரத்தில் இருக்கக் கூடியவர்கள் தான்; அதுவும் மிகக் குறைவாகச் செலுத்துகிறார்கள்; ஒரு படிக்கு ஒரு நயா பைசா கூட இருக்காது" என்று அமைச்சர் பதில் சொல்கிறார். கிராமத்திலே இருப்பவர்கள் கொடுக்கப் போவதில்லை என்று அவர் சொல்லும்போது, கிராமங்களின் நிலைமை அவருக்கு அதிகமாகத் தெரியவில்லையோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது. புஞ்சை தானியம் உபயோகப்படுத்தக்கூடியவர்கள்தான் கிராமங்களில் அதிகம். தங்களுடைய நிலத்திலே உற்பத்தியாகும் தானியத்தைக் கொண்டு ஜீவிக்கக் கூடியவர்கள், கூலியாகக் கிடைக்கும் தானியத்தைக் கொண்டு ஜீவிக்கக் கூடியவர்கள் மிகச் சொற்பம்—ஜனத்தொகையிலே. கிராமத்திலேயிருந்து நகரத்திலே இருக்கும் மண்டிக்குப் போய், திரும்ப கிராமத்திற்குப் போய் விற்கப்படுகிறதேயல்லாமல், கிராமத்திலே விளைவது கிராமத்திலே நேரடியாக உபயோகப்படுவதில்லை. கிராமத்திலே விளைவதைச் சந்தையிலே கொண்டு போய், பிறகு அங்கிருந்து மண்டிக்குப் போய், பிறகு திரும்பவும் சந்தையிலேயே கிராமத்தவர்கள் தானியத்தை வாங்குகிறார்கள் என்பது தான் நடந்துகொண்டிருப்பது. புஞ்சைப் பிரதேசத்தின் நிலைமையை சரியாக அறிந்துகொள்ளாமல், டாக்டர் லோகநாதன் அவர்கள் கூட அந்த விஷயத்தில் தவறு செய்திருக்கிறார். அதே அபிப்பிராயத்தையே சர்க்காரும் ஏற்றுக்கொண்டு, புஞ்சை தானியத்தை கிராமத்திலே உள்ளவர்கள் வாங்குவது கிடையாது என்று சொல்வது நியாயம் அல்ல. புஞ்சை தானிய உணவை நம்பியிருக்கும் மக்கள் ஏராளமாக இருக்கிறார்கள். அவர்களை இது மிகவும் பாதிக்கும் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

உணவுப் பொருள்களுக்கு கட்டாயம் விதி விலக்கு கொடுக்கவேண்டுமென்பதையும் ஆலோசனை செய்ய வேண்டுமென்பதற்காகத்தான் நான் இந்தத் திருத்தங்களை கொடுத்திருக்கிறேன். இவைகளை சர்க்கார் ஏற்றுக் கொள்வார்கள் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. இந்த விவரங்களை சர்க்கார் தெரிந்துகொள்ள வேண்டுமென்பதற்காகத்தான் இந்த திருத்தங்களை நான் கொடுத்திருக்கிறேன்.

* Sri V. K. RAMASWAMY MUDALIYAR: Mr. Speaker, Sir, I wish to say a few words on clause 3 and amendment Nos. 27 and 21. As regards amendment 21, I have spoken about it yesterday, and I reiterate it here to-day. The slab rate should be increased to Rs. 25,000. I am sure there cannot be much difficulty. On the other hand, I am of the opinion that the Government would get more income. Further the poor people who are trading in small items like vegetables will not be affected. That is all my contention. The vegetable vendors, the fruit sellers, and other small traders dealing in articles of consumption will get much relief if the amendment is accepted. The Hon. Minister was telling us yesterday that the intrinsic value of the tax on the whole has not increased. Evidently he has forgotten the fact that transactions have increased in all sectors, and when transactions have increased in all sectors, the Government also are bound to get more money by way of this tax. This point should be taken into consideration by the Hon. Minister.

In regard to amendment No. 27, I wish to reiterate the fact that there should be complete exemption for foodgrains and other perishable articles like flowers, eggs, meat, fruits, plantain leaves, etc. I find on going through some books that this kind of exemption has been given in Uttar Pradesh, Bengal, Kerala, Mysore and

12th February 1959] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

other States. I am sure our Government also will follow suit and see that these perishables are given exemption. In regard to foodgrains, the Hon. Minister was telling us yesterday that 250 Madras measures of rice may not cost Rs. 100 or so. This is not a fact. Two hundred and fifty Madras measures, even if worked out at 14 annas per measure, will come to a large figure. He was also suggesting that after all t would come to one naya Paisa for one measure. When worked out at the multi-point system, it will come to 3 or 4 naye Paise. For 250 measures, this will be a large amount. This will really work hardship on the poor people. Therefore, I would, in all earnestness, request the Hon. Minister to take into consideration all these factors and see that exemption is given to these perishable articles and foodgrains. There should be some consideration shown by the Hon. Minister.

Dr. Lokanathan said that on foodgrains there should be only half a per cent. Now we are increasing it to 1 per cent. In regard to other items, Dr. Lokanathan has said 1 per cent. The Government have raised the rate to 2 per cent. This will really work hardship. Therefore I would request the Hon. Minister to consider all aspects and see that some relief is given to these poor people.

MR. SPEAKER : The Hon. Minister will now reply.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, கடந்த இரண்டு நாட்களாக நடந்த விவாதத்தில் . . .

SRI S. NAGARAJA MONIGAR : ஸார், நான் 33-வது திருத்தத்தை கொடுத்திருக்கிறேன். அதனால் நான் பேச வேண்டாமா என்று அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : I have called the Hon. Minister.

SRI S. NAGARAJA MONIGAR : Sir, I have given notice of an amendment (No. 33).

MR. SPEAKER : The hon. Member may have given notice. But the hon. Member has not stood up to indicate that he wants to speak. If the Hon. Minister has no objection, I will call Sri S. Nagaraja Monigar to speak.

திருத்தங்கள் கொடுத்தவர்கள் எல்லோரும் பேச வேண்டும் என்பது இல்லை. அப்படி எல்லோரும் பேச வேண்டும் என்று சட்டத்தில் கிடையாது. இருந்தாலும் உங்களை பேசுவதற்கு அனுமதிக்கிறேன், கனம் மந்திரி அவர்களுக்கு ஆட்சேபணை இல்லாமல் இருந்தால். ஏனென்றால் அவரைப் பேசுவதற்கு நான் அழைத்துவிட்டேன். கனம் அங்கத்தினர் எல்லோருக்கும் ஒன்று தாழ்மையுடன் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். திருத்தங்கள் கொடுத்தவர்கள் பேச வேண்டுமென்று விரும்பினால் அவர்கள் உடனுக்குடன் எழுந்து நின்று பேசுவதற்கு அனுமதி கேட்கவேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுசிறேன்.

SRI S. NAGARAJA MONIGAR : நான் எப்பொழுதும் அப்படித்தான் எழுந்து நிற்பது உண்டு.

MR. SPEAKAR : உங்களைப்பற்றி மட்டும் நான் குறிப்பிடவில்லை. பொதுவாக எல்லா அங்கத்தினர்களுக்கும் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இருந்த போதிலும் கனம் அங்கத்தினர் நாகராஜ மணிகார் அவர்களைப் பேசுவதற்கு அனுமதிக்கிறேன்.

[12th February 1959

Sri S. NAGARAJA MONIGAR : கனம் சபாநாயகர் அவர்களே இப்பொழுது எனக்குப் பேசுவதற்கு சந்தர்ப்பம் கொடுத்ததற்காக முதலில் என்னுடைய வந்தனத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இந்தச் சட்டத்தின் கீழ் மூன்றாவது பிரிவின் விதி விலக்குகளில் ஒன்றாக எனது 33-ஆவது திருத்தத்தை நான் பிரேரேபிக்கிறேன். அதாவது கோவாப்பரேட்டிவ் சொஸைட்டிகளால் விற்பனை செய்யப்படும் பால் விற்பனைக்கு . . .

The Hon. Sri R. VENKATARAMAN : Sir, I rise on a point of order. A decision has already been taken in regard to exemption to co-operative societies. So this amendment is not in order.

Mr. SPEAKER : இரண்டாவது பிரிவு பிரகாரம் ஏற்கனவே இந்த ஹௌஸ் ஒப்புக்கொண்டு விட்டபடியால் அதைப்பற்றி விவாதம் செய்வது அனாவசியம் என்று அவர் சொல்லுகிறார்.

Sri A. GOVINDASAMY : இப்பொழுது ஸ்பெசிபிக்காக ஒரு திருத்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதனால் அது சரி என்றுதான் தோன்றுகிறது.

Sri M. KALYANASUNDARAM : The point of order raised by the Hon. Minister may not apply to this amendment. That amendment sought to exclude the entire co-operative society from the purview of the tax. But this amendment deals with the sale of milk and milk products by co-operative societies. This amendment is different from the previous amendment.

Mr. SPEAKER : When all products are rejected, does not milk come under that rejection? Normally when the House rejects all products, milk also is included. But, however, if the House will permit . . .

Sri S. NAGARAJA MONIGAR : After hearing me, you may decide the question, Sir.

Mr. SPEAKER : Sri S. Nagaraja Monigar may speak.

* Sri S. NAGARAJA MONIGAR : கனம் சபாநாயகர் அவர்களே, உண்மையிலேயே இம்மாதிரியான ஒரு திருத்தம் கொண்டு வர நேர்ந்ததைப்பற்றி நான் சிந்தனை செய்கிறேன். இம்மாதிரியான ஒரு திருத்தம் கொண்டு வராமல் இருக்கக்கூடிய ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டிருக்கலாகாதா என்றுகூட சிந்திக்கலானேன். பாலினுடைய முக்கியத்துவத்தைப்பற்றி இந்த சபையில் பல சமயங்களில் பல சந்தர்ப்பங்களில் பேசியிருக்கிறோம். பால் உணவு தானியங்களுடன் சேர்த்துக்கொள்ளப்பட்டிருக்கிறதல்லாமல் அழியும் பொருள்களுடன் சேர்க்கப்படாதது ஏன் என்பது எனக்கு விளங்கவில்லை. அழியும் பொருள்களுக்கு எல்லாம் ஒரு விலக்கு அளித்து அதன் மூலம் முப்பதாயிரம் ரூபாய் வரையில் விலக்கு அளித்திருக்கிறார்கள். அதில் பால் எப்படி வராது என்பதுதான் எனக்குத் தோன்றவில்லை. புஷ்பங்கள் ஒரு நாளில் கெட்டுவிடலாம். அதில்கூட மரு, மருக்கொழுந்து, தவனம் போன்றவைகள் பல நாட்கள் இருக்கக்கூடியவைகள். வாழையிலை போன்ற இன்னும் மற்ற பொருள்கள் பல நாட்கள் இருக்கக்கூடியவைகள். அவைகள் ஏழு எட்டு நாட்கள் கூட இருக்கும். ஆனால் பால் மட்டும் ஒரு நாள்தான் நிற்கும். பால் கறக்கும்போது கோமேயம் பட்டுவிட்டால் உடனே பால் கெட்டுப்போய்விடும். இல்லாவிட்டால் பாத்திரங்களை சரியானபடி கழுவாமல் இருந்தால் உடனே

12th February 1959] [Sri S. Nagaraja Monigar]

கெட்டுப்போய் விடும். அப்படிப்பட்ட நிலைமையில் பால் இருக்கிறது. பால் ஒரு உணவுப் பொருளாகவே கருதப்படுகிறது. ஏதோ சில பணக்காரர்கள் அதை உபயோகப்படுத்துவதால் அப்படி நினைக்கிறார்கள். கஞ்சிக்கு உப்பு இல்லை என்பாரும், பாலுக்குச் சர்க்கரை இல்லை என்பாரும் ஒன்றாகுமா என்பது போல் இதை பல பணக்காரர்கள் உபயோகப்படுத்துகிறார்கள் என்று கருதுவதுபோல் தோன்றுகிறது. உண்மையிலேயே பால் குழந்தை களுக்கு வேண்டிய உணவுப் பொருளாகக் கருதப்படுகிறது. நோயாளி களுக்கும் இது உணவுப் பொருளாகக் கருதப்படுகிறது. எவ்வளவோ பேர் களுக்கு இது அத்தியாவசியமான பொருளாக இருக்கிறது. பலருக்கு இது ஜீவாதார மருந்தாக இருக்கிறது. உயிர் போகக் கூடியவனுக்கு ஒரு சொட்டுப் பாலைக் கொடுத்தாவது அவனுடைய உயிரைப் பாதுகாக்கலாம் என்று கூட சொல்லப்படுகிறது :

" விக்கி இருமாமுன்
பாலுள் கண்ட வாய்படாமுன் "

என்று கூட பட்டினத்தடிகள் சொல்லியிருக்கிறார். மருந்துகளைப் போல் இதை சில சந்தர்ப்பங்களில் உபயோகப்படுத்துகிறார்கள். அப்படிப்பட்ட அத்தியாவசியமான பொருள்களில் இதுவும் ஒன்று. "பாலும் தேனும்" ஓடுகிறது என்று சொல்லும்போதுகூட பாலுக்குத்தான் முதல் இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இது மருந்துக்கு வேண்டிய பொருள். இதை சுகமாக சிலர் சாப்பிடுகிறார்கள் என்பதைப் பார்த்து இதை கொள்ளக் கூடாது என்பதுதான் என்னுடைய வேண்டுகோள்.

இரண்டாவதாக, கூட்டுறவு வியாபாரம் லாபத்துக்காகச் செய்யப்படுவது அல்ல. கூட்டுறவு இயக்கத்தைக் காப்பாற்ற "சேல்ஸ் டாக்ஸ்" சட்டத் தைத்தான் உபயோகிக்கவேண்டுமென்பது இல்லை என்று அமைச்சர் அவர்கள் சொன்னதாக நினைக்கிறேன். கூட்டுறவு இயக்கத்திற்கு வரி விலக்குக் கொடுப்பது முக்கியமானது. கூட்டுறவு சங்கங்களின் முக்கிய பொறுப்பும் நோக்கமும் நேர்மையை வளர்ப்பதாகும். இந்த சந்தர்ப்பத்தில் வரி கடுமையாகப் போட்டு சர்க்கார்தான் வியாபாரிகளிடை தவறான செய்கை களை அதிகரிக்கச் செய்கிறார்கள் என்று வியாபாரிகள் சில சமயங்களில் சொல்வதும் உண்மையோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது. கலப் படம் செய்பவர்களையும் கூட்டுறவு சங்கத்தையும் ஒன்றாகவே நினைத்து பணி ஆற்றுவது சரியல்ல. அதிலும் பால் விற்பனை செய்யும் கூட்டுறவுச் சங்கத்திற்கு விற்பனை வரி விலக்கு அளிப்பது மிகவும் முக்கியமானது. பல அந்நிய நாடுகளில் இருந்து நம்முடைய குழந்தைகளுக்காக பால் பவுடரை டின் டின்னாக அனுப்புகிறார்கள். பணமின்றி இனாமாக அனுப்பு கிறார்கள். பள்ளிகளுக்கும் மற்றும் பல இடங்களுக்கும் பணம் இல்லாம மலே நாம் பால் கொடுத்து உதவும்போது, வரி போட்டு அதற்குப் பாதகம் ஏற்படும்படி செய்ய வேண்டாம் என்று சொல்ல ஆசைப்படுகிறேன். நேருஜி முதல் கொண்டு இந்த நாட்டின் செல்வம் குழந்தைகள்தான் என்று கொண்டாடுகிறார்கள். அந்தச் செல்வங்களுக்கு அத்தியாவசிய மான பாலுக்கு வரி போட வேண்டாம் என்று வேண்டிக் கேட்டுக் கொள்ளுகிறேன். 11-30 a.m.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த இரண்டு நாட்களாக நடந்து வரும் விவாதத்திலே முக்கிய மாகச் சொல்லப்பட்டது மூன்றாவது ஷாத்திலே இருக்கக்கூடிய பிரச்னை தான். முதல் முதலிலே இந்த விற்பனை வரிச் சட்டம் கொண்டு வரு கின்ற காலத்தில், இதனால் வரிக் குறைவு ஏற்பட வேண்டுமென்று சொன் னதற்குச் சர்க்கார் இணங்கவில்லை. சட்டத்தை நல்ல முறையிலே திருத்தி அமைத்து, இப்பொழுது இருக்கும், சிக்கல்கள், பிரச்னைகள், தொல்லை கள், தொந்தரவுகள் ஆகியவற்றை நீக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் தான் இதைக் கொண்டு வந்திருப்பதாகச் சொன்னேன். காரணம் என்ன வென்றால் ஐந்தாண்டுத் திட்டத்தில் நிதி வசதி இந்த விதத்திலே குறை யக்கூடாது. வரி குறையும்படியான எந்தக் காரியத்திலும் திட்டத்தின் நடுவிலே ஈடுபட முடியாது. ஆகவே சர்க்கார் இதை வரிக்குறைவு என்ற

[Sri R. Venkataraman] [12th February 1959

முறையில் தயாரிக்கவில்லை. இதில் இருக்கக் கூடிய சிக்கல்கள், தொல்லை கள், தொந்தரவுகளை நீக்குவதற்குத்தான் இப்பொழுது கொண்டு வரப் பட்டிருக்கிறது. இதை ரேஷனலைஸ் செய்ய முடியும் என்பதை பெரு வாரியான வியாபாரிகள் எற்றுக்கொண்டார்கள். இது 20 வருஷங்களுக்கு முன்பு தயாரிக்கப்பட்ட சட்டம். இதற்குப் பல திருத்தங்கள் செய்துவிட் டோம். சட்டமே புரியவில்லை. சட்டத்தைத் திருத்த அவர்கள் யோசனை கூறினார்கள். இன்றைக்கு இருக்கக் கூடிய நிலைமையில், சர்க்கார் ஐந் தாண்டுத் திட்டத்தின் நடுவில் இருக்கக்கூடிய நிலைமையில், செலவுகள் இன்னும் அதிகரித்துக் கொண்டிருக்கக்கூடிய நிலைமையில், இப்பொழுது பஞ்சப்படி 5 ரூபாயாக உயர்த்தி இருப்பதால் ஏற்படும் ஒரு கோடி 75 லட்சம் ரூபாய் அதிகச் செலவை நாம் ஏற்க வேண்டிய நிலைமையில் இருக்கும்போது வரிக் குறைவு செய்ய வேண்டுமென்று கேட்பது அவ்வளவு உசிதம் அல்ல என்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். டாக்டர் லோகநாதன் அவர்கள் சிபார்சில் இரண்டே இரண்டைத்தான் நாங்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. பல கட்ட விற்பனை வரியை ஒரு பர்சன்ட் ஆக ஆக்கவேண்டுமென்பதையும், உணவுக்கு ½ பர்சன்ட் குறைக்கவேண்டும் என்று சிபாரிசு செய்ததையும்தான் நாங்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. சௌகரியமானதை மட்டும் ஏற்றுக் கொண்டோம் என்பதல்ல. பத்தாயிரம் ரூபாய் கம்பவுண்ட் செய்வதில் சர்க்காருக்குச் சாதகம் இல்லை. இப்பொழுது ஏற்றுக்கொண்டிருப்பதிலேயே சாதகம் உள்ளவைகளும் இருக்கின்றன. சாதகம் அல்லாதவையும் இருக் கின்றன. பத்தாயிரம் ரூபாய் முதல் 25,000 வரை கம்பவுண்ட் ரேட் கொடுக்கவேண்டியதில்லை. 30,000 வரை விதி விலக்கு கொடுக்கவேண்டு மென்று அவர் சொல்லவில்லை. காய்கறிகளுக்கும் மற்றப் பொருள் களுக்கும் வரி விதிக்க வேண்டுமென்பது அவருடைய அறிக்கை. இந்த அறிக்கையின் அடிப்படையில் எந்தெந்த முறையில் நன்றாகத் திருத்தி அமைத்தால் பாதிக்கப்படாது என்ற நோக்கத்துடன்தான் செய்யப்படு கிறது. நிதி நிலைமையின் காரணமாகவும், ஐந்தாண்டுத் திட்டத்தின் நடைமுறையை மாற்றியமைக்க முடியாத காரணத்தினாலும்தான் இந்த இரண்டு சதவிகிதத்தை ஒரு சதவிகிதமாகக் குறைக்க முடியாது என்று கூற விரும்புகிறேன். நேற்று பொது விவாதத்திற்குப் பதில் சொல்லும் போதும் கூறினேன். இந்த மசோதாவை இந்தச் சபையிலே பிரேரேபிக் கும்போதுகூடச் சொன்னேன். வரி விதிப்பைக் குறைக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் இந்தச் சட்டம் கொண்டு வந்ததாக நினைத்துக் கொண்டிருக்க கூடியவர்களுக்கு, " இது அந்த நோக்கத்துடன் கொண்டு வரப்படவில்லை என்பதை ஆதியிலிருந்தே சொல்லி வருகிறேன் " என்பதைக் கூறிக் கொள்ள விரும்புகிறேன். இந்த வரியைக் குறைத்தால் ஐந்தாண்டுத் திட்டத்தில் இருக்கும்படியான பல திட்டங்களை நிறுத்தி விடும்படியான நிலைமை ஏற்பட்டு விடும். நாம் இதைக் காட்டி " நாங்கள் இவ்வளவு ரூபாய் வசூலித்து இருக்கிறோம் " என்று சொல்லி மேற்கொண்டு மத்திய சர்க் காரில் இருந்து திட்டத்திற்காகப் பணம் வாங்கச் சௌகரியமாக இருக்கும். " விற்பனை வரியை அரை சதவிகிதமாகக் குறைப்பது நல்லதா அல்லது நான்கைந்து கம்யுனிடி ப்ராஜக்ட் வேலையை நிறுத்தி விடுவது நல்லதா ? சிறு கைத்தொழில்களை ஆரம்பிப்பதையெல்லாம் நிறுத்தி விடுவது நல் லதா ? ½ பர்சன்ட் வரியைக் குறைப்பது நல்லதா ?" என்பதை ஆராய்ந்து பார்த்துத் தெரிந்து கொள்ளவேண்டும். ப்ளாக் மார்க்கெட் இருக்கிறது என்று பழனிசாமி கூறுகிறார்கள். வரியைக் குறைத்து விடுவதால் ப்ளாக் மார்க்கெட் இருக்காது என்று பழனிசாமி அவர்கள் வாதத்திற்காகச் சொல்லலாமே தவிர, நடைமுறையில் அது சரியாக இருக்காது. இரண்டு வரி விதிப்பு குறைவினால் மக்கள் நல்லவர்களாக, யோக்கியமானவர்களாகத் திருந்தி விடுவார்கள் என்று சொல்வது அனுபவத்தில் சரியாகக் காணப் படுவது இல்லை. " தியரி "ப்படி தத்துவார்த்தமாகச் சொல்லி இருக்க லாமே தவிர, நடைமுறையில் எந்தவிதமான மாற்றமும் ஏற்பட்டு விடாது. வரி கொடுக்காமல் ஏமாற்றிக் கொண்டிருப்பவர்கள் கட்டாயமாக எப்பொழு தும் அதைச் செய்து கொண்டுதான் இருப்பார்கள். குறைக்கவேண்டு மென்ற கொள்கை இதனால் அல்ல. வேறு பொதுவாக மக்களுக்குப் போடவில்லை என்ற பெயர் கிடைக்கவேண்டுமென்பதற்காகச் செய்ய வேண்டுமென்று சொன்னால் அது எங்களுக்குக்கூட சந்தோஷந்தான்.

12th February 1959] [Sri R. Venkataraman]

சர்க்காரும்கூட "வரி விதிக்கவில்லை" என்று சொல்லி நல்ல பெயரை வாங்கிக் கொள்ள முடியும். இன்றைக்கு இருக்கக்கூடிய நிலையில் நம்முடைய "டெவலப்மெண்ட் ப்ரோகிராம்" கெட்டுவிடுமே என்ற ஒரே காரணத்தி னுல்தான் வரி விதிப்பு விகிதத்தைக் குறைக்க முடியவில்லை என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, பத்தாயிரம் ரூபாய் என்பதை இருபத்தி ஐயாயிரம் என்று உயர்த்த வேண்டுமென்று சொன்னுர்கள். இதையும் நீங்கள் நன்ருகப் பரிசிலனை செய்து பார்க்கவேண்டும். இன்றைக்கு வியாபாரி களுக்குத் தொல்லை இல்லாமல் செய்ய வேண்டுமென்பதற்காக நாம் பத்தாயிரம் ரூபாயில் இருந்து இருபத்தி ஐயாயிரம் ரூபாய் வரை கம்பவுண் டிங் ரேட்டைப் போட்டிருக்கிருேம். இதன்படி பதினையாயிரத்திற்குக் குறைவாக பத்தாயிரம் ரூபாய்க்கு மேல் வியாபாரம் செய்யக்கூடிய ஒருவன் வருஷத்திற்கு 120 ரூபாய்தான் வரி கட்டவேண்டும். பதினுலாயிரம் ரூபாய்க்கு ஒருவர் வியாபாரம் செய்வதாக வைத்துக்கொண்டால் இரண்டு பர்சன்ட் என்று போட்டால் 280 ரூபாய் வரி கட்டியாக வேண்டும். ஆனுல் இப்போது அவர் கொடுப்பதானது 120 ரூபாய்தான். ஒரு பர்சண்டையும் விடக் குறைவு. பத்தாயிரத்திற்கு மாதம் 10 ரூபாய் என்ற விகிதத்தில் 120 ரூபாய் கட்டுகிருர்கள். கிட்டத்தட்ட முக்கால் பர்சண்டுக்கும் குறைவாக இருக்கிறது. ஆகவே 125 ரூபாய் வரையில்தான் ஒரு சிறு வியாபாரி வரி கட்ட வேண்டியிருக்கிறது. இன்னும் 25,000 ரூபாய் வியாபாரம் 11-40 a.m. செய்யக்கூடியவர் இப்பொழுது கொடுக்கவேண்டிய தொகையைப் பார்த் தால் அது அரை சதவிதிதத்திற்குத்தான் வரும். பழம் காய்கறி இவற்றுக்குக்கூட இன்றையதினம் பெரிய வியாபாரிகள் சிறிய வியாபாரி களோடு சேர்ந்து தப்பிக்கொள்ளப் பார்க்கிருர்கள். முப்பதாயிரம் ரூபாய்க்கு மேல் வியாபாரம் செய்யக்கூடிய ஒருவரால் ஏன் கணக்கு வைத் துக் கொள்ள முடியாது? முப்பதாயிரம் ரூபாய்க்குக் குறைவாக வியா பாரம் செய்யக்கூடியவர்கள் என்ருல்—சிறு வியாபாரிகள்—அன்ருடம் வாங்கி விற்பனை செய்கிற கூடைக்காரர்கள்—அங்காடிக்காரிகள்—இவர் களுக்கு எல்லாம் கஷ்டம் எற்படக்கூடாது என்றுதான் அப்படிச் செய் தோம். ஆனுல் அதற்கு மேல் வியாபாரம் செய்யக்கூடியவர்களுக்கு நாம் பரிந்து அனுதாபம் காட்டுவதன் காரணம்தான் தெரியவில்லை. 30 ஆயிரத்துக்கு மேல் வியாபாரம் செய்யக்கூடியவர்கள் என்ருல் அவர் களால் கணக்கு வைத்துக்கொள்ள முடியும். கணக்கு வைத்துக் கொள் ளவும் வேண்டும். குமாஸ்தாக்கள் போட்டுக் கொள்ள அவர்களுக்கு முடியும். யாராவது ஒிருவர்கள் இதனுல் வேலை பெறட்டும். அதில்லா மல் சிறிய வியாபாரிகளை ஒட்டி பெரிய வியாபாரிகளும் தப்பிக்கொள் வதற்கு எடுக்கப்படுகிற முயற்சியை யாரும் ஆதரிக்க மாட்டார்கள் என்று நினைக்கிறேன்.

கம்பௌண்டிங் லிமிட்டை அதிகமாகச் செய்துகொண்டே போனுலும் வர்த்தகம் பிரிந்துவிடும். மாமன் மச்சான் பேரில் கடைகளைப் பிரித்துக் காட்டி வரிவிதிப்பிலிருந்து தப்பிவிடத்தான் முயற்சி எடுப்பார்கள். ஆகவே வரி விதிப்பின் எல்லையை உயர்த்திக் கொண்டே போவதும் சரியல்ல. லட்சம் ரூபாய்க்கு வியாபாரம் செய்யக்கூடியவர் 50, 50 ஆயிரத்துக்கு வியாபாரம் நடப்பது போல இரண்டு கடைகளாகப் பண்ணிவிடுவார்கள். இல்லாவிட்டால் அவர்கள் வரி கட்டுகிருர்கள் என்ருல் யாருக்கு வரி கட்டு கிருர்கள்? சர்க்காருக்கு வரி கட்டுகிருர்கள். சர்க்கார் பணத்தை யாரும் வீட்டுக்குக் கொண்டு போகவில்லை. ராஜ்யத்தில் நாம் செய்கிற அபிவிருத்தித் திட்டங்களுக்கே அது செலவழிக்கப்படுகிறது. வரி குறைப்பது என் ருல் எல்லா டெவலப்மெண்டுவொர்க்ஸும்தான் பாதிக்கப்படும்.

டாக்டர் லோகநாதன் அவர்கள் கம்பௌண்டிங் லிமிட்டை 25 ஆயிர மாகச் செய்யவேண்டும் என்று சிபார்சு செய்திருந்தார்கள். அவர் மேற்கொண்டும் ஒன்று சொல்லியிருக்கிருர். அதாவது 25 ஆயிரத்திலிருந்து 50 ஆயிரம் வரையில் கம்பௌண்டிங் லிமிட்டை உயர்த்த முடியுமா என் பதைச் சர்க்கார் தங்களுடைய அனுபவத்தைப் பார்த்து முடிவு செய்யலாம் என்று சொல்லியிருக்கிருர்கள். நடை முறையில் நமக்கு ஏற்படுகிற

[Sri R. Venkataraman] [12th February 1959

அனுபவத்தைக் கொண்டு கம்பௌண்டு ரேட்டை எந்த அளவுக்கு விதிக்கலாம் என்பதை சர்க்கார் பரிசிலனை செய்யும். இன்றைக்கு நாம் இந்தச் சட்டத்தில் மிகப் பெரிய மாறுதலைச் செய்து கொண்டிருக்கும்போது அதனால் நம்முடைய நிதி குறைவு ஏற்படுமானால் —அதனால் நமக்கு எவ்வளவு அதிகமான கஷ்டம் ஏற்படும் என்பதையும் நாம் உணர்ந்து கொள்ளவேண்டும். இதை உணராது வரியைக் குறைக்கவேண்டும் அல்லது இல்லாமல் செய்யவேண்டும் என்கிற அடிப்படையில் பால் முதலியவைகளைப் பற்றி பலர் பேசுகிறார்கள். இவை ஒவ்வொன்றையும் எடுத்து அலசி அலசிப் பார்த்துதான் பொறுக்கு கமிட்டியில் 25 அங்கத்தினர்கள் முடிவு செய்து இருக்கிறார்கள். வீட்டிலே மாட்டை வைத்துக்கொண்டு கறந்து வியாரம் செய்கிறவர்கள் இந்த வரி விதிப்பினால் பாதிக்கப்படபோவதில்லை. காரணம் 10 ஆயிரம் ரூபாய் வரையிலும் விலக்கு அளித்திருக்கிறோம். 10 ஆயிரம் ரூபாய்க்கு இப்படி யாரும் விற்பனை செய்ய முடியாது. சாதாரணமாக வீட்டிலே பால் கறந்து வாங்கி உபயோகிக்கிற எந்த மக்களும் இந்த வரியினால் பாதிக்கப்படப்போவதில்லை. இப்படி வாங்கி பாலை உபயோகிப்பவர்களின் எண்ணிக்கைதான் அதிகமும் கூட. ஆனால் இப்போது போட்டிருக்கிற வரியைக் கட்டப்போகிறவர்கள் இரண்டு விதம்தான். ஒன்று பால் சொஸைடிகள். இரண்டாவது கண்டிராக்டர்கள். கண்டிராக்டர்கள் டெண்டர் எடுத்து பால் சப்ளை செய்ய ஒப்புக்கொள்ளும்போதே சேல்ஸ் டாக்ஸையும் சேர்த்துத்தான் டெண்டர் எடுப்பார்கள். அதுபோல சொஸைடியிடத்தில் பாஸ்டரைஸ்டு மில்க் பாட்டிலில் போட்டு வீட்டில் கொண்டுவந்து டெலிவரி பண்ணவேண்டுமென்று விரும்புகிறவர்கள், a certain percentage of the people கொஞ்சம் இந்த வரியைத்தான் கட்டட்டுமே. இப்படி பால் வாங்கி உபயோகிப்பவர்களின் எண்ணிக்கை 10 பர்சண்ட்-க்கு மேல் இருக்காது. பாக்கி 90 பர்சண்ட் பேர்கள் சாதாரணமாக மாடுகள் வைத்துக்கொண்டோ, வீட்டில் கொண்டு வந்து கறந்து கொடுப்பவர்களிடத்திலோதான் வாங்குகிறார்கள். இவர்கள் இதனால் பாதிக்கப்படப்போவதில்லை. ஆகவே பால் குழந்தைகளின் உணவாயிற்றே, குழந்தைகள் நாட்டின் செல்வமல்லவா என்பதாகவெல்லாம் கோபுரங்களை அடிக்கிக்கொண்டே—அஸ்திவாரம் இல்லாமல் போவது சரியல்ல. பாலுக்கு எந்தவிதமான வரியையும் சாதாரணப் பிரஜை கொடுக்கப் போவதில்லை. (சம்இண்டாப்ஷன்) கனம் கோவிந்தசாமி அவர்களுக்கும், மற்றுமுள்ள இந்தச் சபை அங்கத்தினர்களுக்கும் நான் வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். சொஸைடிக்காரர்கள் பால்காரர்களிடத்திலிருந்து பால் வாங்குகிறார்கள். இப்படி அநேக பால்காரர்களிடத்திலிருந்து பாலைச் சேகரிக்கும்போது—பால்காரர்களின் மீது இந்த விற்பனை வரி விதிக்கப்படுவது கிடையாது. மேலும் எந்த ஒரு பால்காரனும் 10 ஆயிரத்திற்கு மேல் பால் சப்ளை செய்ய முடியாது. பத்தாயிரத்துக்கு உட்பட்டே அவர்கள் வருவதால் அதற்கு விதிவிலக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த சொஸைடிக்காரர்கள் பாலை விற்பனை செய்யும்போது—சொஸைடி—பாஸ்ட்ரைஸ்டு மில்க்—பாட்டிலில் வீட்டில் கொண்டு வந்து தரவேண்டும் என்று விரும்புகிறவர்கள்தான் இந்த வரியைக் கட்டப் போகிறார்கள். அதேமாதிரி கண்டிராக்டர்கள் காண்டிராக்ட் எடுக்குப்போது வரியை சேர்த்துவிடுவார்கள். ஆகவே ஏழை மக்கள் majority of the people கஷ்டப்படப்போகிறார்கள் என்ற வாதம் சரியல்ல என்று சொல்ல விரும்புகிறேன்.

அடுத்தபடியாக உணவு தானியத்தைப் பற்றியும் நேற்று நான் சொன்னேன். நான் சொன்னது தவறு, எனக்குக் கிராமம் தெரியாது என்று சொன்னார்கள். எல்லாவற்றையும் தெரிந்து கொண்டு தான் சொல்வது என்பது யாராலும் முடியாது. அப்படிச் சொன்னால் சந்திர மண்டலத்தைப் பற்றிப் பேச முடியாது. மற்றவர்களும்கூட ஏதோ தங்களுக்கு ஒரு கிராமத்தில் இருக்கக்கூடிய அனுபவத்தை வைத்துக் கொண்டு தான் உலகம் அப்படி இருக்கிறதென்று பேசுகிறார்கள் என நினைக்கிறேன். நானும் என்னுடைய குறைந்த அனுபவத்தை வைத்துக்கொண்டு—இருக்கிற புள்ளி விவரங்களை எல்லாம் வைத்துப் பேசவேண்டியிருக்கிறது.

12th February 1959] [Sri R. Venkataraman]

புள்ளி விவரப்படி நமக்கு உற்பத்தி 32 லட்சம் டன்தான் அரிசியிலே. (சம் இண்டரப்ஷன்) **I am talking of paddy.** சாதாரணமாக எல்லா விஷயங்களைப் பற்றியும் நான் சொல்வேன். கேட்காவிட்டாலும் கூடச் சொல்வது வழக்கம். என்னை இடை மறிக்காமல் இருந்தால் எல்லா விஷயங்களையும் சுலபமாகச் சொல்ல முடியும்.

புள்ளிவிவரப்படி நம்முடைய உற்பத்தி 32 லட்சம் டன் என்றேன். இந்த 32 லட்சம் டன் அரிசியை எடுத்துக்கொண்டால் வியாபாரிகள் மூலம் மார்க்கெட்டுக்கு விற்பனைக்கு வருவது 10 லட்சம் டன்தான் என்று கணக்குப் போட்டிருக்கிறார்கள். மற்றது எல்லாம் உணவுப் பொருளாகவோ, விதைகளாகவோ, மற்றச் செலவுகளாகவோ உபயோகப் படுத்திக்கொண்டு விடுகிறார்கள். ஆகவே அரிசிக்கு சேல்ஸ் டாக்ஸ் என்றால் இந்த 10 லட்சம் டன்தான் கணக்கு வரும். இந்தப் பத்து லட்சம் கூட வியாபாரத்திற்கு வருவது குறைவு. ஆகவே இதனால் கிராமத்தில் இருக்கக்கூடியவர்கள் எல்லோரும் பாதிக்கப்படுகிறார்கள் என்று சொல்வது சரியல்ல.

அதேமாதிரியாக கம்பு கேழ்வரகு தானியத்தை எடுத்துக்கொண்டாலும் உற்பத்தி செய்யப்படுகிற இடத்தில் உபயோகப்படுத்திக் கொள்கிறார்கள் என்பது சர்க்காரிடம் உள்ள புள்ளிவிவரம். சில ஊரில் வண்டிகளில் கொண்டு போய் விற்கிறார்கள். மற்றவர்கள் வாங்குகிறார்கள் என்று சொன்னால் அந்த நிலை இல்லை என்று நான் சொல்லவில்லை. பெருவாரியாக உற்பத்தி செய்கிற இடத்தில்தான் உபயோகப்படுத்திக் கொள்கிறார்கள். அந்த இடத்தில் வரி கிடையாது. பொதுவாக இம்மாதிரி பொருள்களுக்கு இரண்டு மூன்று டிரான்சாக்ஷன் இருந்தால்தான் விற்பனை வரி விதிக்கக்கூடிய நிலைமை உண்டாகிறது. விவசாயிகளிடத்தில் இருந்து வியாபாரி வாங்கி, அதை கடைகளுக்குக் கொடுத்து கடையில் வைத்து விற்கிற நிலையில் விற்பனை வரி வருகிறது. இந்த மாதிரியான நிலைமையில் இருக்கக்கூடிய அளவு குறைவு என்பது சர்க்கார் புள்ளி விவரம். ஆகவே மெஜாரிடியாக இருக்கக்கூடிய—பெருவாரியாக இருக்கக்கூடிய சாதாரண பிரஜை யாரும் உணவு தானியங்களுக்கு விற்பனைவரி விதிப்பதின் காரணமாகப் பாதிக்கப்படவில்லை என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக எவ்வளவு சத விகிதம் இதில் வருகிறது என்பதைப் பற்றிகூட சற்று குறை கூறினார்கள். **Wholesale price** மீதுதான் விற்பனை வரி விதிக்கப்படுகிறது. மூட்டை ஒன்றுக்கு 20 ரூபாய் விலை என்று வைத்துக்கொண்டால் 5 மூட்டை நெல் 100 ரூபாய் ஆகும். ஒவ்வொரு மூட்டையும் 48 பட்டணம்படி என்றாலும் ஐந்து மூட்டைகள் 240 படி ஆகிறது. இந்த 240 படியின் விலை 100 ரூபாய் ஆகிறது. ஆகவே ஒவ்வொரு ரூபாய்க்கும் ஒரு நயா பைசாவுக்கும் குறைவானதாக இருக்கிறது. இந்த மூன்று transaction இருந்தால்தான் ஒரு நயா பைசா வரி ஆகின்றதுகூட ஆகாததேன் என்பதை நீங்கள் அலசிப் பார்க்கவேண்டும். (குறுக்கீடு) நெல்லின் விலை 20 ரூபாய்தான். இதனால் அதிகமான ஒரு பெரிய கஷ்டமோ அல்லது பளுவோ ஏற்படும் என்று சொல்வதற்கில்லை. நெல்லுக்கும் அரிசிக்கும் வரி போடுவதற்கு என்ன காரணம் என்பதை தெரிந்துக் கொள்ளவேண்டும். நெல்லுக்கு வரி போடாவிட்டால் நம் ராஜ்யத்திலிருந்து நெல்லாக மற்ற ராஜ்யத்துக்கு வாங்கிப்போகும் பொருள்களுக்கும் எந்தவிதமான வரியும் கிடைக்காது. நம் ராஜ்யத்திலிருந்து பிற ராஜ்யங்களுக்குச் செல்லும் நெல்லின்மீது ஒரு தம்படி வரிகூட கிடைக்காது. இன்றைக்கு நம் ராஜ்யத்திற்கு வரவேண்டிய வருமானத்தைப் பாதுகாத்துக்கொள்ளவேண்டும் என்பதற்காக நெல்லின்மீது வரிபோடப்படுகிறது. ஆந்திராவில் 3 சத விகிதம் வரி கொடுத்துத்தான் சென்னை நகருக்கு அவர்களிடமிருந்து உணவு தான்யங்களைக் கொண்டு வருகிறோம். மைசூர் ராஜ்யத்திலும், கேரள ராஜ்யத்திலும் வரி போடவில்லை என்றால் அவைகள் பற்றாக்குறை ராஜ்யங்களா இருக்கின்றன. அந்த மாகாணங்களிலிருந்து நாம் உணவுப்பொருள் வாங்கிக்கொண்டுவரமுடியாது. அங்கிருந்து நாம் வாங்கிக்கொண்டு வரமுடியும் என்ற நிலைமை

11-50 a.m.

[Sri R. Venkataraman] [12th February 1959

இருக்குமானல், அவர்களும் தங்களுடைய வருவாயைப் பாதுகாத்துக்கொள் வதற்கு நிச்சயமாக விற்பனைவரி போடுவார்கள். ஆந்திரர்கள் ராஜ்யத் திலேயே இன்றைக்கு விற்பனை வரிகூட இருப்பது அவர்கள் தங்களுடைய வருவாயைப் பாதுகாத்துக்கொள்வதற்குத்தான். அது surplus province ஆக இருக்கிறது. அவர்களுடைய நெல் பிற ராஜ்யங்களுக்குச் செல்கிறது. இந்த வருவாயைப் பாதுகாத்துக்கொள்வதற்கு வரி கேட்கிறார்கள். நம்மு டைய ராஜ்யத்தில் இன்றைக்கு போதிய அளவு உணவு தான்யம் இருக்கிறது. இங்கு மண்டல நிலை இருப்பதால் நெல் வெளி ராஜ்யங்களுக்குச் செல கிறது. நாமே ஆந்திரா ராஜ்யத்திலிருந்து வாங்குகிறோம். நம் ராஜ்யத் திலே வாங்குகிறபோது விற்பனை வரி கொடுக்கவேண்டுமென்றால் வெளியே போகும் நெல்மீது வரி போட்டால்தான் அந்தப் பணம் நமக்குக் கிடைக்கும். ஆகவே இதை நன்றாக அலசிப்பார்த்து நம்முடைய வரு மானம் இந்தத் துறையிலே பாதிக்கப்படாமல் இருக்கவேண்டும் என் பதற்காக இந்த விதி செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே இந்தத் திருத் தங்கள் எல்லாவற்றையும் கனம் அங்கத்தினர் அலசிப் பார்க்கும்படியாக நான் மிகத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

சர்க்காரிடத்திலிருந்து பாரம் (Form) வாங்க வேண்டுமென்ற முறையை மாற்றி அமைக்கவேண்டுமென்று கனம் அங்கத்தினர் லாசர் அவர்கள் சொன்னார்கள். இந்த பாரத்தை யாராவது அச்சிட்டு தவருக உபயோகப்படுத்திவிடுவார்களேயானல் சர்க்காருக்கு மிகுந்த நஷ்டம் ஏற்பட்டுவிடும். அதற்காகத்தான் தாங்களே அச்சிட்டு நெம்பர் போட்டு சரியான முறையில் இருக்கிறதா என்பதை பின்னல் செக் செய்வதற்குக் கூட வசதியாக இருக்கிறது. கனம் லாசர் அவர்கள் இந்த விதமான முறை வேறு எந்தச் சட்டத்திலும் கிடையாது என்று சொன்னார்கள். தயவுசெய்து சென்ட்ரல் சேல்ஸ் டாக்ஸ் சட்டத்தை பார்த்தால் இந்த விதியை அவர்கள் போட்டிருக்கிறார்கள் என்பது புலனாகும். ஆகவேதான் இது நம் முடைய ராஜ்யத்திலும் ஏமாற்றப்படாமல் இருப்பதற்காக இந்த ஷரத்து இருக் கிறது. இதைத் தெரிந்துகொண்ட பிறகு கனம் லாசர் தம்முடைய திருத் தத்தை வாபஸ் பெறுவார்கள் என்று நம்புகிறேன். இந்த வரியைக் குறைக் கவேண்டும் என்று சொல்வது அவ்வளவு நல்லது அல்ல என்று சொல்ல விரும்புகிறேன். இது நாட்டுக்கு நல்லதா என்பதை கவனிக்கவேண்டும். இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைமையிலே நம்முடைய நாட்டில் ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றுவதற்கு இந்த வரி மிகவும் உதவியாக இருக்கும். ஏதோ வாயளவில் வரியை நானும் குறைத்துவிட்டு, வரியை குறைக்கிறேன் என்று குறைத்துவிட்டு இதனல் நம்முடைய திட்டங்களை நிறைவேற்றாமல் இருப்பதா ? அல்லது இதனல் நம்முடைய திட்டங்களை நிறைவேற்று வதற்காக இந்த வரிக் கஷ்டங்களை ஏற்றுக்கொள்வது நல்லதா என்பதை சபையும் முடிவுசெய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு இந்தத் திருத் தங்களை கனம் அங்கத்தினர் வாபஸ் பெற வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

(Sri K. Sattanatha Karayalar rose.)

MR. SPEAKER: The hon. Member cannot make a speech after the Hon. Minister has replied.

SRI K. SATTANATHA KARAYALAR: இந்த வரி விகிதத்தின் ரேட் டைக் குறைத்தால் ஒரு வேளை பணம் குறைந்து விடுமோ என்று சொல்லு கிறார்கள். ஆனல் பெட்டிங் திருத்த சட்டத்தைப் பற்றி கனம் நிதி அமைச் சர் பேசுகையில் ரேட் குறைப்பதினாலே வருமானம் குறைந்திருக்கிறது என்று சொன்னார்கள். அந்த அடிப்படையிலேயே இந்த ரேட்டைக் குறைத் தால் ஓரளவில் நமக்கு அதிக வருமானம் வராதா ?

*THE HON. SRI R. VENKATARAMAN: பெட்டிங் டாக்ஸ்-ஐ நாம் ஒரே இடத்தில் வசூல் செய்கிறோம். குதிரை ஓடுகிற இடத்தில் வசூல் செய்வது சுலபமாக இருக்கிறது. ஆனல் இது பல இடங்களிலே பல

12th February 1959]. [Sri R. Venkataraman]

மக்களிடத்திலிருந்தும் நாம் வசூல் செய்யவேண்டிருப்பதால் ஒரு முனை வரி வசூல் செய்யக்கூடியதில் இருக்கக்கூடிய நன்மை இதில் இருப்பதில்லை. ஆகவேதான் நாம் வரியைக் குறைத்து வருவாயை அதிகரித்துவிட இயலாது என்று சொல்ல விரும்புகிறேன்.

Mr. SPEAKER : தயவுசெய்து கனம் அங்கத்தினர்கள் தங்கள் ஆதரவையும் எதிர்ப்பையும் தெரிவிக்கும்போது உரத்த குரலில் தெரிவிக்கும்படியாயக் கேட்டுக் கொள்ளுகிறேன். ஓட்டு போடும்போது ஆதரிக்கிறார்களா எதிர்க்கிறார்களா என்று தெரியவில்லை. இவைகள் முக்கியமான திருத்தங்களாக இருப்பதனாலும், கனம் அங்கத்தினர்களுடைய அபிப்பிராயம் தெரிய வேண்டி இருப்பதாலும் இதைச் சொல்லவிரும்புகிறேன்.

The amendments of Sri N. K. Palanisami, Sri S. M. Annamalai, Sri N. Marudachalam and Sri A. Govindasamy to sub-clause (1) and the amendments of Sri S. M. Annamalai and Sri N. K. Palanisami to the provisos to sub-clause (1) were put and lost.

Mr. SPEAKER : I shall now put the amendment moved by Sri M. Kalyanasundaram to vote. The question is :

" *For* item (1) of the proviso to sub-clause (1), *substitute* the following, viz.:—

' (i) In the case of foodgrains and perishable articles such as vegetables, milk, flowers, fresh fruits, plantain leaves, betals, eggs, meat and fish no sales tax shall be levied irrespective of turnover '."

The amendment was put and declared lost.

Sri M. KALYANASUNDARAM : I demand a poll, Sir.

(When the division bell was pressed, it was found not working.)

Mr. SPEAKER : I am afraid the electricity mechanism has gone out of order. So, let us wait for some time. In the meantime, we shall dispose of the other amendments.

Mr. SPEAKER : The question is—

" In item (i) of the proviso to sub-clause (1), *omit* the word ' flowers '." 12 noon.

The amendment was put and lost.

Mr. SPEAKER : The question is—

" In item (i) of the proviso to sub-clause (1), *for* the words ' the rate shall be one per cent ', *substitute* the words ' the rate shall be half per cent '."

The amendment was put and lost.

Mr. SPEAKER : The question is—

'In item (ii) of the proviso to sub-cluase (1), *for* the words "Thirty thousand rupees", *substitute* the words "fifty thousand rupees".'

The amendment was put and lost.

Mr. SPEAKER : The hon. Member Sri Nagaraja Monigar is not pressing his amendment, I think.

Sri S. NAGARAJA MONIGAR : I am not pressing the amendment, Sir.

Sri M. KALYANASUNDARAM : I am objecting to leave being granted to the hon. Member to withdraw the amendment.

Mr. SPEAKER : Then I will put the amendment to the vote of the House. The question is—

'After item (ii) of the proviso to sub-clause (1), *add* the following item, viz. :

"(iii) the sale of milk and milk products by co-operative societies shall not be liable for any tax under this Act".'

The amendment was put and lost.

The amendment was put and the House divided thus : was, by leave, withdrawn.

Mr. SPEAKER : The bell is ringing all right now. We will take up the amendment of Sri M. Kalyanasundaram. The question is—

'*For* item (i) of the proviso to sub-clause (1), *substitute* the following, viz. :—

"(i) In the case of foodgrains and perishable articles, such as vegetables, milk, flowers, fresh fruits, plantain leaves, betels, eggs, meat and fish no sales tax shall be levied irrespective of turnover".'

The amendment was put and the House divided thus :—

*Ayes.*

Sri V. K. Ramaswamy Mudaliyar.
,, T. S. Ramaswamy Pillai.
,, A. Govindasamy.
,, M. Kalyanasundaram.
,, A. R Marimuthu.
,, K. Ramachandran.
,, M. Jagannathan.
,, N. K. Palanisami.
,, M. D. Ramasami.
,, M. Karunanithi.
,, V. Subbiah.
,, A. Perumal.
,, N. Marudachalam.

Sri S. A. M. Annamalai Odayar.
,, K. Appavoo Pillai.
,, P. S. Ellappan.
,, M. Selvaraj.
,, K. Gopala Gounder.
,, S. M. Annamalai.
,, M. P. Sarathy.
,, T. Irusappan.
,, T. Thirumalaimuthu Veerasakkaya Thiruvenkadasami Naicker.
,, A. V. P. Periavalaguruva Reddy.
,, D. S. Authimoolam.
,, K. Sattanatha Karayalar.

12th February 1959]

*Noes.*

Sri B. Bhaktavatsalu Naidu.
" G. Annamalimuthuraja.
" P. Appavu.
" K. S. Ardhanareeswara Gounder.
" V. Arunachala Thevar.
" W. P. A. R. Chandrasekaran.
" R. Chidambara Bharathi.
" V. Chinniah.
" N. P. M. Chinniah Kavundar.
" A. Chinnasami.
" T. T. Daniel.
The Hon. Sri K. Kamaraj Nadar.
" C. Subramaniam.
" M. Bhaktavatsalam.
" M. A. Manickavelu.
" P. Kakkan.
Sri P. G. Karuthiruman.
" D. Dasarathan.
" T. P. Elumalai.
" G. Gomathi Sankara Dikshitar.
" V. Govindaswami Naidu.
" G. G. Gurumurthy.
" P. Jayaraj.
" R. Kandasami.
" M. R. Kandasami Mudaliyar.
" Karuthappa Gounder.
" Kolanda Gounder.
" V. K. Krishnamurthy.
" R. Krishnaswami Gopalar.
" P. Kuppusami.
" S. Lakshmana Gounder.
" S. Lazar.
" B. K. Linga Gowder.
" T. Manavalan.
" P. G. Manickam.
" M. K. Mariappan.
The Hon. Sri V. Ramiah.
Srimathi T. N. Anandanayaki.
" Hemalatha Devi.
" Kamalambuja Ammal.
" A. S. Ponnammal.
" Kolanthai Ammal.
" P. K. R. Lakshmikantham.
Srimathi Rajathi Kunchithapatham.
" Savithri Shanmugham.
Sri J. Matha Gowder.
" V. A. Muthaiya.
" S. Nagaraja Monigar.
" T. M. Nallaswami.
" K. P. Palaniswami.
" K. G. Palaniswami Gounder.
" K. Pandiyaraj.
" P. M. Periakaruppan Ambalam.
" K. Periannan.
" P. Ramachandran.
" M. Ramachandra Reddiyar.
" S. Ramalinga Padayachi.
" T. R. Ramamirtha Thondaman.
" S. Ramasami Naidu.
" A. Chidambaranatha Nadar.
Srimathi Dr. Soundaram Ramachandran.
Sri K. L. Ramaswami.
" A. Rathnavel Gounder.
" S. Sadasivam.
" S. C. Sadayappa Mudaliar.
" R. C. Samanna Gounder.
" Sami Sahajananda.
" S. Sangili.
" T. V. Sannasi.
" M. S. Selvarajan.
" M. K. Somasundaram.
" T. K. Subbiah.
" R. Subramaniam.
" K. S. Subramania Gounder.
" N. S. Sundararajan.
" R. Swaminatha Merkondar.
" S. Thangavelu.
" N. R. Thiagarajan.
" A. Vedarathnam Pillai.
" M. William.
" A. Samuel Nadar.
" K. R. Viswanathan.
" N. M. Vellappan.
" V. Vedayyan.
" P. Vedamanickam.

*Ayes*—25. *Noes*—85.

The amendment was lost.

The clause was put and carried.

*Clause* 2—cont.

THE HON SRI R. VENKATARAMAN: Mr. Speaker, we can now take up and dispose of clause 2. I will accept the amendment proposed by the hon. Member, Sri Palanisami. Also there is a typographical error, and the bracket has been omitted. The amendment given notice of by Sri Srinivasa Iyer supplies the omission and I propose that it be taken as a Government amendment. I move—

'In item (j), bracket the words, "other than newspapers, actionable claims, stocks and shares and securities".'

MR. SPEAKER : The question is—

"In explanation (1) to sub-clause (*r*), *omit* the word 'or' occurring after the word 'grading', and after the word 'sorting', *add* the words 'or drying'."

The amendment was put and carried.

MR. SPEAKER : The question is—

'In item (j), bracket the words, "other than newspapers, actionable claims, stocks and shares and securities".'

The amendment was put and carried.

The clause, as amended, was put and carried.

*Clause* 4.

SRI N. K. PALANISAMI : I move—

'*Omit* the words "whatever be the quantum of turnover in that year".'

SRI M. KALYANASUNDARAM : I second it, Sir.

SRI N. K. PALANISAMI : இதில் 'whatever be the quantum of turnover' என்று சொல்லப்பட்டிருக்கிறது. . Why not the Government fix a minimum turnover for that instead of saying whatever be the quantum of turnover'.

THE HON. SRI R. VENKATARAMAN : இது 'டிக்லேர்ட் குட்ஸை'-ப் பொறுத்தது. இரண்டாவது ஷெட்யூலிலுள்ள சாமான்களைப் பொறுத்தது. எந்த எந்தப் பண்டங்கள் மீது 2 சதவிகிதத்திற்கு மேல் வரி போடக் கூடாது என்று மத்திய சர்க்காரால் போடப்பட்டிருக்கும் விதிக்கு உட்பட்ட பண்டங்கள் அவை. அவைகளுக்கு 'எக்ஸெம்ஷன்' கிடையாது. ஆகையால்தான் இங்கே 'whatever be the quantum of turnover' என்று போடப்பட்டிருக்கிறது.

The amendment was put and lost.

The clause was put and carried.

Clause 5 was put and carried.

*Clause* 6.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—

"*For* clause 6, the following shall be *substituted*—

'6. Tax under this Act to be in addition to tax under Central Act 74 of 1956 or any other law : The provisions of this Act relating to taxation of successive sales inside the State, only at a single point or at one or more points shall apply only to sales inside the State (other than sales in the course of inter-State trade or commerce) and the tax under this Act shall be levied in addition to any tax levied under the Central Sales Tax Act, 1956 (Centarl Act 74 of 1956) or any other law for the time being in force'.

12th February 1959] [Sri R. Venkataraman]

சென்ட்ரல் ஸேல்ஸ் டாக்ஸ் விதிக்கப்படும் பொருள்களின் மீது ராஜ்ய சர்க்காராகிய சென்னை சர்க்காரும் விற்பனை வரி விதிக்கலாம் என்பதைத் தெளிவுபடுத்தும் நோக்கத்துடன் இந்தத் திருத்தம் கொடுக்கப்படுகிறது. இப்போதுள்ள சட்டத்திலேயே இதற்காக 'க்ளாஸ்' இருக்கிறது. அதை சற்று மாற்றுவதற்காக இவ்வாறு திருத்தியமைக்கிறோம்."

The amendment was put and carried.

Clause 6, as amended was put and carried.

*Clause 7.*

SRI S. M. ANNAMALAI : I move—

"In sub-clause (1), *for* the word 'ten', *substitute* the word 'twenty', and *for* the word 'twenty', *substitute* the word 'thirty'."

SRI M. P. SARATHI : I second the amendment, Sir.

SRI M. JAGANNATHAN : I move—

"In sub-clause (1), *for* the words 'ten' and 'twenty-five' *substitute* the words 'twenty' and 'forty' respectively."

SRI K. RAMACHANDRAN : I second the amendment, Sir.

SRIMATHI T. N. ANANDANAYAKI : I move—

"In sub-clause (1), *for* the words 'more than twenty-five thousand rupees', *substitute* the words 'more than fifty thousand rupees'."

SRIMATHI KAMALAMBUJAMMAL : I second the amendment, Sir.

SRI K. SATTANATHA KARAYALAR : I move—

"In sub-clause (1), *for* the words 'ten' and 'twenty-five', *substitute* the words 'twenty-five' and 'fifty' respectively."

SRI K. RAMACHANDRAN : I second the amendment, Sir, .

SRI N. K. PALANISAMI : Sir, I move—

"In sub-clause (1)—

(i) *for* the words 'ten thousand rupees', *substitute* the words 'twenty-five thousand rupees';

(ii) *for* the words 'twenty-five thousand rupees', *substitute* the words 'fifty thousand rupees'; and

(iii) *for* entries (i), (ii) and (iii) *substitute* the following, namely :—

| | Rates of tax. |
|---|---|
| Where the total turnover is not less than twenty-five thousand rupees but is less than fifty thousand rupees. | One hundred and twenty rupees. |

SRI N. MARUDACHALAM : I second the amendment, Sir.

[12th February 1959

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move—

" *For* items (i), (ii) and (iii) of sub-clause (1), *substitute* the following, viz. :—

| | Rate of tax. |
|---|---|
| (i) Where the total turnover is not less than twenty-five thousand rupees but is less than forty thousand rupees. | One hundred and eighty rupees per annum. |
| (ii) Where the total turnover is not less than forty thousand rupees but is not more than fifty thousand rupees. | Two hundred and forty rupees per annum. " |

SRI K. RAMACHANDRAN : I second the amendment, Sir.

SRI M. KALYANASUNDARAM : Sir, I move that—

" In items (i), (ii) and (iii) of sub-clause (1), *for* the entries under column ' Rate of tax ', *substitute* respectively the following, viz. :—

' Sixty rupees per annum ',

' Ninety rupees per annum ',

' One hundred and twenty rupees per annum '."

SRI N. K. PALANISAMI : I second the amendment, Sir.

SRI S. M. ANNAMALAI : I move—

" In item (i) of sub-clause (1), *for* the words ' ten ' and ' (fifteen ', *substitute* the words ' twenty ' and ' twenty-five ' respectively."

SRI M. P. SARATHI : I second the amendment, Sir.

SRI M. JAGANNATHAN : Sir, I move—

" In item (i) of sub-clause (1), *for* the words ' ten ' and ' fifteen ', *substitute* the words ' twenty ' and ' thirty ' respectively."

SRI K. RAMACHANDRAN : I second the amendment, Sir.

SRI S. M. ANNAMALAI : I move—

" In item (ii) of sub-clause (1), *for* the words ' fifteen ' and ' twenty ', *substitute* the words ' twenty-five ' and ' thirty ' respectively."

SRI M. P. SARATHI : I second the amendment, Sir.

SRI M. JAGANNATHAN : Sir, I move—

" In item (ii) of sub-clause (1), *for* the words ' fifteen ' and ' twenty ', *substitute* the words ' thirty ' and ' thirty-five ' respectively."

SRI K. RAMACHANDRAN : I second the amendment, Sir.

12th February 1959]

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

"In item (iii) of sub-clause (1), *for* the word 'twenty' wherever it occurs, *substitute* the word 'thirty'."

SRI M. P. SARATHI : I second the amendment ,Sir.

SRI M. JAGANNATHAN : Sir, I move—

"In item (iii) of sub-clause (1), *for* the words 'twenty' and 'twenty-five', *substitute* the words 'thirty-five' and 'forty' respectively."

SRI K. RAMACHANDRAN : I second the amendment, Sir.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

"In sub-clause (2), *for* the words 'more than twenty-five thousand rupees may apply to the assessing authority to be permitted to pay the tax under this section and on being so permitted he shall', *substitute* the words 'not less than twenty-five thousand rupees and not more than fifty thousand rupees may'."

SRI N. MARUDACHALAM : I second the amendment, Sir.

SRI M. JAGANNATHAN : Sir, I move—

"In sub-clause (2), *for* the words 'twenty-five', *substitute* the word 'forty'."

SRI K. RAMACHANDRAN : I second the amendment, Sir.

MR. SPEAKER : The hon. Member, Sri Lazar, is not in his seat. However, as Mr. Karayalar has also given notice of the same amendment he may move it if he wants.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move that—

"In sub-clause (2) *for* the word 'twenty-five', *substitute* the word 'fifty'.

SRI K. RAMACHANDRAN : : I second the amendment, Sir.

MR. SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

SRI S. M. ANNAMALAI : மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, 3-வது பிரிவிற்கு நான் கொடுத்த திருத்தமே ஒத்துக்கொள்ளப்படவில்லை. அந்தத் திருத்தத்தின் அடிப்படையில்தான் இந்தத் திருத்தத்தையும் கொடுத்திருக்கிறேன். "கம்பவுண்டட் டாக்ஸ்" செலுத்துவதற்கு இருக்க வேண்டிய குறைந்த பட்ச வருமான வரம்பையும் அதிகப் பட்ச வருமான வரம்பையும் இன்னும் கொஞ்சம் அதிகரிக்க வேண்டும் என்பது தான் என் திருத்தத்தின் நோக்கம். என் திருத்தத்தை கனம் அமைச்சர் ஏற்றுக்கொள்ளப் போவதில்லையானாலும், நான் சொல்ல வேண்டிய கடமைக்காக இதைச் சொன்னேன். இத்துடன் என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

**SRI N. K. PALANISAMI** : கனம் சபாநாயகர் அவர்களே, 50,000 ரூபாய் மொத்த வருட வருமானம் உள்ளவர்களை பெரிய வியாபாரிகளாகக் கருத முடியாது. சாதாரண வியாபாரிகளுக்கும் 50,000 ரூபாய் வருமானம் வருகிறது. சில வியாபாரிகள் கம்பவுண்டிங் ரேட்டில் விற்பனை வரியைச் செலுத்துவதற்கு சர்க்கார் இந்த மசோதாவில் வகை செய்திருப்பது மிகவும் நல்ல அம்சம். இது சம்பந்தமாக நிர்ண யிக்கப்பட்டுள்ள உயர்ந்தபட்ச மொத்த வருமானத்தை 50,000 ரூபாய்க்கு உயர்த்த வேண்டும் என்று என் திருத்தம் கூறுகிறது.

(கனம் உதவி சபாநாயகர் தலைமை வகித்தார்.)

இந்தப் பிரிவின் (2)-வது உப பிரிவில் ' . . . . அண்ட் ஆன் பீயிங் ஸோ பெர்மிட்டெட் . . . .' என்று சொல்லப்பட்டிருக்கிறது. டர்னோவரில் 2 சத வீதம் பார்த்தால் சுமார் 300 ரூபாய் வரும். எனவே கம்பவுண்டிங் ரேட்டில் 150 ரூபாய்க்குத்தான் " ரெலீப் " கிடைக்கிறது. கம்பவுண்டிங் ரேட்டில் குறைக்க வேண்டும் என்று டாக்டர் லோகநாதன் அவர்கள்கூட சொல்லியிருக்கிறார்கள். எனவே கம்பவுண்டிங் ரேட்டில், இந்த அளவை 50,000 ரூபாய்க்கு உயர்த்தவேண்டும்; 25,000 ரூபாய் வரை எந்த வரியும் கிடையாது என்று விதிக்கவேண்டும்; 25,000 ரூபாய்க்கு மேல் கம்பவுண்டிங்கிற்கு அனுமதிக்க வேண்டும்.

" கம்பவுண்டிங் ரேட் " -இல் வரி செலுத்த வேண்டுமானால், அதற்கு அதிகாரிகளின் அனுமதியைப் பெற வேண்டும் என்று மசோதாவில் விதிக்கப்பட்டிருக்கிறது. (2)-வது உப பிரிவில் " Any dealer. . . . . . . may apply to the assessing authority. . . . . and on being so permitted he shall pay " . . .

என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறு இருக்கக்கூடாது. ஒரு வியா பாரி கம்பவுண்டிங் ரேட்டில் வரி செலுத்த விரும்பினால் அதற்கு எந்த விதமான தடையும் இருக்கக்கூடாது. அப்படியே அவர் பெர்மிஷன் வாங்க வேண்டுமென்றால், ரெகார்ட் பூர்வமாக அந்த டீலர் பேரில் தப்பு இருந் தால், அப்போது அதற்கு " அப்ஜெக்ஷன் " இருக்கலாமே தவிர, மற்றப்படி கம்பவுண்டிங்கிற்கு யாராலும் எந்த விதமான தடையும் இருக்கக்கூடாது.

மேலும், இந்தப் பிரிவைப் பொறுத்தவரையில், வியாபாரிக்கு, அப்பீல் செய்துகொள்வதற்கான உரிமை மசோதாவில் அளிக்கப்படவில்லை. அதற்கு வகை செய்யப்படவில்லை. அவசியம் 31-வது பிரிவிற்கு 7-வது பிரிவையும் உட்படுத்த வேண்டும் என்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

12 20 p.m. சாதாரணமாக ஒரு கடையை எடுத்துக்கொண்டால் ஸிங்கில் பாயிண்ட் டாக்ஸிலும், டபிள் பாயிண்ட் டாக்ஸிலும் பல சமான்கள் விற்கப்படுகின்றன. மேலும் எக்ஸைஸ் ட்யூட்டி கட்டி சர்க்கரை, துணி வியாபாரமும் செய்வார்கள். ஆகவே, டோட்டல் டேர்ன் ஓவர் என்பதற்கு பதில் " டாக்ஸபிள் டேர்ன் ஓவர் " என்று திருத்திவிட்டால் சரியாகயிருக்கும். அதை சர்க்கார் கொண்டு வர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**SRI K. RAMACHANDRAN** : " எக்ஸெம்ஷன் லிமிட்டை " 10,000 ரூபாய் என்பதை 20,000 ஆக ஆக்க வேண்டுமென்ற யோசனையை சர்க்கார் ஏற்றுக் கொள்ளவில்லை. அத்துடன் டாக்ஸ் விகி தத்தை 2 சத வீதம் என்றிருப்பதை 1 சத வீதம் ஆக குறைக்கவேண்டு மென்று சொன்னதையும் சர்க்கார் ஏற்றுக் கொள்ளவில்லை. இந்தத் திருத்தங்கள் கொடுக்கப்பட்டிருப்பதின் நோக்கம், சிறு வியாபாரிகள் அனு வசியமாக பாதிக்கப்படக்கூடாது, விற்பனை வரி இலாகா அதிகாரிகளால் அவர்களுக்கு அனுவசியமான தொந்தரவு ஏற்படக்கூடாது, தொழில் முறையில் அவர்களுக்கு அனுவசியமாக கஷ்டங்கள் ஏற்படக்கூடாது என்ற கருத்தையொட்டிதுத்தான் இத்திருத்தங்கள் கொண்டு வரப்பட்டிருக்கின் றன. அதை ஏற்றுக்கொள்ளவில்லை. இருந்தபோதிலும் இந்த கம் பவுண்டிங் லிமிட் என்பது வியாபாரிகளுக்கு அதிக தொந்தரவு இல்லாத விஷயமாக இருப்பதால் அதையாவது 25,000 என்றிருப்பதை 40,000 வரையில்

12th February 1959] [Sri K. Ramachandran]

உயர்த்தி அந்த சலுகையைக் கொடுக்கவேண்டுமென்பதுதான் நான் கொடுத்திருக்கும் திருத்தத்தின் நோக்கம். ஆகவே, 25,000 என்பதை 40,000 ஆக ஆக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். இதனால் அரசாங்கத்தின் வருவாய் ஒன்றும் குறைந்து விடாது. வியாபாரிகள் வரியை ஏமாற்றும் சூழ்நிலையும் இதில் வராது என்று சொல்லிக் கொண்டு 25,000 என்பதை 40,000 ஆக ஆக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

* SRI K. SATTANATHA KARAYALAR : நான் கொடுத்திருக்கக்கூடிய திருத்தமும் கிட்டத்தட்ட இதற்கு முன் கொடுத்திருந்த அடிப்படையில்தான் கொடுக்கப்பட்டிருக்கிறது. 25,000 வரை மொத்த டேர்ன் ஓவர் இருந்தால் அதற்கு விதிவிலக்கு கொடுக்கவேண்டுமென்று கொடுத்துள்ளேன். 15,000-த்தில் இருந்து 25,000 வரையிலுள்ள டேர்ன் ஓவர் குறைந்த டேர்ன் ஓவராகத்தான் இருக்கவேண்டும். அதனால் வரக்கூடிய வரி குறைவாகத்தான் இருக்கும். ஆகவே 25,000 முதல் 40,000 வரையிலும் 40,000-க்கு மேல் 50,000 வரையிலும் உள்ள வியாபாரிகளிடம் மட்டும் சர்க்கார் கொடுத்திருக்கும் அடிப்படையில் வரிவசூல் செய்யலாம். 25,000 மொத்த டேர்ன் ஓவர் உள்ளவர்கூட மிக சாதாரண சிறு வியாபாரிகள்தான் மிகச் சிறிய சில்லரை வியாபாரிகள்தான் இந்த 10,000 முதல் 25,000 வரையிலுள்ள டேர்ன் ஓவர் லிஸ்டில் வருவார்கள். அவர்களுக்கு விதிவிலக்கு அளிப்பது, பெரிய நிவாரணம் ஆகும். ஆகவே அதை சர்க்கார் அங்கீகரிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : அமைச்சர் அவர்கள் வரியைக் குறைக்காத அளவில், சர்க்கார் வருமானத்தைப் பாதிக்காத அளவில் யோசனை சொன்னால் நல்லதென்று சொன்னார்கள். எனது திருத்தம் வரியைப் பாதிக்காது என்று நினைக்கிறேன். 25,000 என்று கம்பவுண்டிங் லிமிட் வைத்திருப்பதை 50,000 ஆக உயர்த்தினால் நன்றாகயிருக்கும். அடித்தளத்தை உயர்த்திவிட்டால் நான்கு கடைகளாக வைத்துக் கொள்வார்கள், அப்படி வரியை ஏமாற்ற முடியும் என்று சொன்னார்கள். அது யோசிக்கவேண்டிய விஷயந்தான். ஆனால் 25,000 என்பதை 50,000 ஆக மாற்றினால், கம்பவுண்டிங் ரேட்டை உயர்த்துவதால் நஷ்டம் வராது. இப்பொழுது குத்துமதிப்பாக ஒரு ரேட் போட்டு வாங்குகிறோம். வேண்டுமென்றால் குத்து மதிப்பு தொகையை அரசாங்கத்தின் வருமானம் பாதிக்காத அளவில் அதிகப்படுத்திக் கொள்ளலாம். நான் சொல்வது போல் 50,000 வரை உயர்த்தினால் வியாபாரிகள் கணக்கு வைத்துக் கொள்ளும் தொல்லையிலிருந்து விடுபடமுடியும். வியாபாரிகள் படும் கஷ்டம், கணக்கு வைத்து கொண்டு அதிகாரிகளிடம் போய் நிற்கவேண்டியிருப்பதால் அவர்கள் வியாபாரத்தையே கெடுப்பதுடன், அவர்கள் படும் கஷ்டம் சொல்லிமுடியாது. ஆகவே இந்தச் சலுகையை அளித்தால் அது மிகவும் வரவேற்கத் தக்கதாகயிருக்கும். இது, அரசாங்க வருமானத்தைப் பாதிக்காத யோசனையாக இருப்பதால் அமைச்சரவர்களின் சிந்தனைக்கு இது ஏற்றதாகயிருக்கும் என்ற எண்ணத்தோடு இந்தத் திருத்தத்தைக் கொண்டு வருகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : இந்தப் பிரிவில் இரண்டு திருத்தங்கள் அவசியமென்று கருதுகிறேன். ஒன்று, அதிகாரிகளுடைய அனுமதியை முன் கூட்டியே பெற வேண்டுமென்று சப் செக்ஷன் 2-ல் இருக்கிறது. In sub-clause (1), it is said ' . . . may *at his option*', வியாபாரி, தான் விரும்பினால் முதலாவதாகவே வரி கட்ட சலுகை பெற்றுக் கொள்ளலாம் என்று இருக்கிறது. ஆனால் அதற்கு மனு செய்து அதிகாரி அனுமதி அளித்தால்தான் அப்படி செய்யமுடியும் என்றிருக்கிறது. இரண்டாவது பிரிவில் of assessing authority to be permitted to pay the tax under this section and on being so permitted. என்றிருக்கிறது. அனுமதி வாங்கினால்தான் இந்த சலுகையை வருட ஆரம்பத்தில் பெற முடியும் என்றிருக்கிறது. வருட ஆரம்பத்தில் வியாபாரி விரும்பினால் அதைக் கட்டாயம் அதிகாரி கொடுக்க வேண்டுமென்றிருக்க வேண்டும். இறுதியில் அதிகாரிக்கு சந்தேகம் ஏற்பட்டால்

கணக்கைப் பார்த்து இவர் சலுகைக்கு அருகதையுடையவர் அல்ல என்று முடிவு செய்தால் மொத்த விற்பனையின் பேரில் வரி கட்டவேண்டும் என்று சொல்வதற்கு உள்ள அதிகாரம் இருக்கிறது' . . on being so permitted' என்றிருக்கிறது. முதலிலேயே வரி கட்ட மனு செய்தவுடனேயே அப்படி கட்டிவிடுவதற்கு உரிமை இருக்க வேண்டும். அப்படி தவறு ஏதாவது செய்திருந்தால் அதைக் கண்டுபிடிப்பதற்குள்ள அதிகாரம் அதிகாரி களுக்கு இருக்கிறது. ஆகவே பழனிசுவாமி அவர்கள் கொடுத்திருக்கும் திருத்தத்தை ஒப்புக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இரண்டாவதாக, கட்டணம் அதிகமாகயிருக்கிறது. ஒரு வேளை பலகட்ட விகிதத்தை 2 சத வீதம் என்று வைத்திருப்பதால் அதேயடிப்படையில் லோக நாதன் அவர்கள் சிபாரிசு செய்திருப்பதை இரண்டு மடங்கு விதிப்பதாக மசோதாவில் இருக்கிறது. நான் முதலில இருந்தே லோகநாதன் அவர் கள் சிபார்சுகளை அப்படியே ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று சொல்லி யிருப்பதால் இந்த விஷயத்திலும் டாக்டர் லோநாதன் அவர்களின் சிபார்சின் அடிப்படையில் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொண்டு இந்தக் கட்டணத்தைப் பாதியாக குறைத்து திருத்தம் கொடுத்திருக்கிறேன். அதை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : : உதவி சபாநாயகர் அவர்களே, இந்த வரியை கம்பவுண்ட் செய்வது 50,000 வரை உயர்த்த வேண்டுமென்று டாக்டர் லோகநாதன் அவர்களின் அறிக்கையிலேயே இருக்கிறது. ஓரிரு வருடங்கள் நிலைமையைப் பார்த்து, இதனால் சர்க் காருக்கு என்ன அனுபவம் வருகிறது என்பதைப் பார்த்து அதை யொட்டி உயர்த்தலாம் என்று சொல்லியிருக்கிறார்கள். அந்தக் கருத்தை சர்க்கார் மனதில் வைத்துக்கொண்டிருக்கிறது. ஓரிரு வரு டங்கள் இப்பொழுதுள்ளபடி கம்பவுண்டிங் ரேட் எப்படி நடை முறையில் நடந்து வருகிறது என்று பரிசீலனை செய்து பின்னால் அது பற்றி ஒரு முடிவு எடுக்கப்படும். ஆரம்பத்திலேயே 50,000 ரூபாய் வரை கம்பவுண்ட் ரேட் செய்து விட வேண்டுமென்று திடீரென்று முடிவு செய்தால் அதனால் நடைமுறையில், இதை அமுல் செய்யும் போது சிக்கல்கள் என்னென்ன வருமோ அல்லது அதனால் வருவாய் குறைவு என்ன வருமோ என்று தெரியாமல் போய்விடும். ஆனால் அந்தக் கருத்தை சர்க்கார் மனதில் வைத்துக் கொண்டிருக்கிறது என்பதைத் தெரி வித்துக்கொள்ள விரும்புகிறேன்.

12-30 p.m. அடுத்தபடியாக, இந்த ரேட்டை நாம் இரண்டு சதவிகிதம் என்று போட்ட அடிப்படையில் மாற்றி அமைத்திருக்கிறோம். ஒரு சத விகிதம் என்பதை ஒத்துக்கொண்டிருந்தால், டாக்டர் லோகநாதன் அவர்கள் சொன்ன அளவுக்கே இந்த ரேட்டுகளும் போடப்பட்டிருக்கும். இப்பொழுது 'ஜெனரல் ரேட்டை' இரண்டு சத விகிதம் என்று போட்டுவிட்டு, இங்கு மாத்திரம் குறைத்தால் அது வியாபாரிகளிடையே பல சிக்கல்களையும், கஷ்டங்களையும் உண்டாக்கும். பெரிய வியாபாரிகள் மிக அதிகமான வரி யும், சிறிய வியாபாரிகள் மிகக் குறைவான வரியும் கொடுக்க வேண்டிய நிலைமை ஏற்படுமேயானால், வியாபாரம் பாதிக்கப்படும். அதனால் கஷ்டமான நிலைமை ஏற்படும்.

அடுத்தபடியாக, ஸ்ரீ பழனிசுவாமி அவர்களின் திருத்தம் 'On being so permitted' என்ற வாசகத்தை எடுத்துவிடவேண்டுமென்பதுதான். அதை எடுத்துவிட்டால், இரண்டு லட்சம் ரூபாய் வியாபாரம் செய்யக் கூடிய வர்கள் கூட 25,000 ரூபாய்க்குத்தான் வியாபாரம் நடப்பதாகச் சொல்லி விட்டு மாதத்திற்கு ரூபாய் 15 வரி கொடுக்க முன் வந்து விடுவார்கள். பின்னால் வரக்கூடிய ஷாத்தில் 'ப்ரொவிஷனல் அஸெஸ்மெண்டு' என்று வைத்திருக்கிறோம். அதிகமான வியாபாரம் செய்பவர்களுக்கு வருஷ நடைமுறையிலேயே 'ப்ரொவிஷனல் அஸெஸ்மெண்டு' செய்ய முடியும். அதிலிருந்து பெரிய வியாபாரிககள் தப்பித்துக் கொள்வார்கள். அதற் காகத் தான் 'On being so permitted' என்ற வாசகத்தை இதில் சேர்த்திருக்கிறோம். இல்லாவிட்டால், யாரும் தன்னுடைய அபிப்பிரா

12th February 1959] [Sri R. Venkataraman]

யத்தில், தன்னுடைய மதிப்பில் 25,000 ரூபாய்க்குத்தான் வியாபாரம் ஆவதாகச் சொல்லிவிடுவார்கள். பிறகு அதுவே முடிவாகப் போய்விடும். அந்த முடிவை அப்படியே ஏற்றுக்கொள்ள முடியாது. அது நியாயமல்ல. அதனால்தான் ' On being so permitted ' என்ற வாசகத்தைச் சேர்த்திருக்கிறோம்.

' டாக்ஸபிள் டர்ன்ஓவர்க்கு ' மாத்திரம் ' டாக்ஸ் ' போட வேண்டு மென்று சொன்னால், அப்பொழுது ' கம்பவுண்டிங்குக்கு ' அர்த்தமில்லா மல் போய்விடும். ' கம்பவுண்டிங் ' அடிப்படையைப் பார்த்தால் கணக்கு இல்லாமல் மொத்தமாக ' பர்சேஸ் பில்லை ' வைத்துக்கொண்டு எவ்வளவு வியாபாரம் என்று மதிப்பிட்டு அதற்கு வரி போடவேண் டும். அப்படியிருக்கும்பொழுது ' டாக்ஸபிள் டர்ன்ஓவர்க்கு ' தான் வரி விதிக்கவேண்டுமென்று சொன்னால், ஒருமுனை வரி விதிக்கக்கூடிய பொருள்களுக்கு தனிக் கணக்கு வைக்கவேண்டும். பலகட்ட வரி விதிக்ககூடிய பொருள்களுக்கு தனிக் கணக்கு வைக்க வேண்டும். ' டெக்லார்டு குட்ஸ் ' சம்பந்தமாக தனிக் கணக்கு வைக்க வேண்டும். எதை நாம் தவிர்க்கவேண்டு மென்று நினைக்கிறோமோ அதை மறுபடியும் செய்ய வேண்டியிருக்கும். அதனால் மிகவும் கஷ்டமான நிலைமை ஏற்பட்டுவிடும். ஆகவேதான் இந்த ஷரத்து இந்த விதமாக போடப்பட் டிருக்கிறது. இதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்ளு கிறேன்.

The amendment of Sri S. M. Annamalai to sub-clause (i) was put and lost.

The amendments of Sri M. Jagannathan and Srimathi T. N. Anandanayaki were by leave, withdrawn.

All the other amendments were put and lost.

The clause was put and carried.

*Clause* 8.

DEPUTY SPEAKER : The motion is :

That clause 8 do stand part of the Bill.

If anybody wants to speak on the clause, he may speak.

* SRI G. G. GURUMOORTHI : கனம் சபாநாயகர் அவர்களே, 8-வது பிரிவின் பிரகாரம் 3-வது ஷெட்யூலில் கண்ட சில பொருள்களுக்கு வரியி லிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. தற்பொழுது பவானியில் நெய் யக் கூடிய ஜமக்காளத்திற்கு வரி கிடையாது. ஆனால் இந்த ஷெட்யூல் பிரகாரம் ஜமக்காளத்திற்கு வரி விதிக்க வேண்டிய நிலைமை ஏற்படுகிறது. கைத்தறியில் நெய்யப்படக்கூடிய நெசவுத் தொழிலில் பழமையான தொழில் இது. இந்தத் தாலுகாவில் இருக்கக்கூடிய ஒரு சில கிராமங் களில் இந்தத் தொழில் நடந்துகொண்டு வருகிறது. இந்தத் தாலுகாவில் எல்லா இடங்களிலும் நடைபெறுவதில்லை. வெளிப் பிரதேசங்களுக்குச் சென்று ஆர்டர் வாங்கி, அதன்பேரில் நெய்து விற்பனை செய்யக்கூடிய வியாபாரமாக இருக்கிறது. இந்த ஜமக்காளம் நெய்யும் தொழிலில் 10,000 தொழிலாளிகள் ஈடுபட்டிருக்கிறார்கள். ஆறு மாத காலத்திற்கு இந்தத் தொழில் சரிவர நடைபெறுவதில்லை. அவர்களுக்கு சரியானபடி கூலி கிடைக்காததினால் தொழில் சரிவர நடைபெறுவதில்லை. மத்திய அரசாங்கம்கூட இதற்கு ரயில்வே கட்டணத்தில் சலுகை அளித்திருக் கிறார்கள். ரயில்வே கட்டணத்தில் பாதிக் கட்டணம்தான் இதற்கு விதிக்கப்படுகிறது. ஆகவே, மூன்றாவது ஷெட்யூலில் ' கார்பெட்ஸ்

என்று இருப்பதை நீக்கி, கார்பெட்டுக்கும் வரி விலக்கு அளிக்கவேண்டு மென்று ஒரு திருத்தம் கொடுத்திருக்கிறேன். அதை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொண்டு இந்தத் தொழிலைக் காப்பாற்ற வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

SRI A. GOVINDASAMY : இந்த விதி விலக்கில் பனியனையும் சேர்த்துக் கொள்ளவேண்டுமென்ற சாதாரண கோரிக்கையை ஏற்றுக் கொள்ளவேண்டும். இதில் அமைச்சர் அவர்கள் பிடிவாதமாக இல்லாமல் கொஞ்சம் விட்டுக்கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : மூன்றுவது ஷெட்யூலில் ' ஹாண்டு லூம் கிளாத் ' என்று போட்டிருப்பதால் இந்தப் பிரச்னை வர இருக்கிறது. அதை மாற்றி ' ஹாண்டுலூம் குட்ஸ் ' என்று போட்டுவிட்டால் சரியாகப் போய்விடும். இந்த நேரத்தில் கைத்தறியில் நெய்யக்கூடிய எல்லா பொருள்களுக்கும் விதி விலக்கு கொடுக்கவேண்டுமென்பதுதான் கவனிக்க வேண்டிய விஷயம். ஜமக்காளம் கைத்தறியில் நெய்யப்படுவது போல் ஒரு சிறிய அளவுக்கு ' கிவில்டும் ' கைத்தறியில் நெய்யப்படுகிறது. ஒரு விசேஷ தறியைக் கொண்டு ஊசி நூல் சேராமலே ' கிவில்டு ' தலைகாணி இவை நெய்யப்படுகிறது. அப்படி நெய்யக்கூடியவர்களிடமிருந்து வரி வசூலிக்கப்படுகிறது. அதற்கும் விதி விலக்கு கொடுக்கவேண்டியது அவசியமாகிறது. ஆந்திராவில் இதற்கு விதி விலக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. இதற்கு இங்கே விதி விலக்கு கொடுக்காவிட்டால் ஆந்திராவிலிருந்து ' கிவில்டு ' இங்கு வந்து போட்டி போடக்கூடும். ஆகையினால் இதற்கு விதி விலக்கு கொடுக்க வேண்டிய அவசியமாகிறது. கைத்தறியினால் நெய்யக்கூடிய எல்லாப் பொருள்களுக்கும் விதி விலக்கு அளிக்க வேண்டியது மிகவும் அவசியம். அதை கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இப்பொழுது இதற்கு உடனடியாக அமைச்சர் அவர்கள் பதில் சொல்ல முடியாவிட்டால் 17-வது பிரிவில் விதிவிலக்கு அளிப்பதற்கு கொடுக்கப்பட்டிருக்கக் கூடிய அதிகாரத்தைக் கொண்டாவது ஜமக்காளம், ' கிவில்டு ', தலையணை இவைகளுக்கு வரியிலிருந்து விலக்கு அளிக்கவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

12-40 p.m.

* THE HON. SRI R. VENKATARAMAN : இதில் (8-வது) செக்ஷனில் சொல்லப்பட்டிருப்பதையும், 17-வது செக்ஷனில் சொல்லப்பட்டிருப்பதையும், இரண்டிற்கும் இருக்கின்ற வித்தியாசத்தை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். 8-வது செக்ஷனில் மத்திய சர்க்காரால் வரியிலிருந்து விலக்களிக்கப்பட்டிருக்கும் பொருட்களைப்பற்றி குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால் 17-வது செக்ஷனில் ராஜ்ய சர்க்கார் எந்தெந்த பொருட்களின் மீது விதிவிலக்கு கொடுக்க வேண்டும் என்பதைப் பற்றி பரிசீலித்து விலக்கு கொடுக்கப்பதற்குள்ள அதிகாரத்தை கொடுக்கின்ற செக்ஷனாகும். இதில் எந்தெந்த பொருள்களுக்கு எக்ஸஸம்ஷன் கொடுக்கவேண்டும் என்று முடிவு செய்யப்படும்பொழுது இவைகளைப்பற்றி கவனிக்க முடியும். பவானி சமுக்காளம் விஷயமாக 17-வது ஷரத்தில் சொல்லப்பட்டிருக்கின்ற விதிகளின் பிரகாரம் வரிவிலக்கு கொடுத்திருக்கிறோம். ஆகவே பின்னால் எதற்கெல்லாம் எக்ஸ்ம்ஷன் கொடுக்கவேண்டும் என்று சர்க்கார் பரிசீலனை செய்யும் போது கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னவற்றையும், கனம் கோவிந்தசாமி அவர்கள் சொன்னவற்றையும், கனம் குருமூர்த்தி அவர்கள் சொன்னவற்றையும் கவனத்தில் எடுத்துக்கொள்ளும் என்பதையும் தெரிவித்துக்கொண்டு, இதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

The clause was put and carried.

Clause 9 was put and carried.

12th February 1959]

*Clause* 10.

DEPUTY SPEAKER : The motion is :

"That clause 10 do stand part of the Bill."

SRI N. K. PALANISAMI : Sir, I move—

"*For* the words 'such dealer', *substitute* the words 'the assessing authority.'"

SRI N. MARUDACHALAM : I second the amendment, Sir.

DEPUTY SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

SRI N. K. PALANISAMI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, சாதாரணமாக ஒரு வியாபாரி 50 ரூபாய்க்கு சாமான்கள் வாங்கினால்கூட, அங்கிருக்கக்கூடிய வரி விதிக்கின்ற ஆபீஸர், அவரை பிடித்துக்கொண்டு போய் அவர் மேல் வரி விதிக்க முடியும். அவ்விதம் வரி விதிக்கப்பட்ட ஆள், தான் வரி கொடுக்கவேண்டிய அவசியமில்லை என்பதை நிரூபிக்க ஹைகோர்டு வரைக்கும் போய்தான் நிரூபிக்க முடியும். இது சாதாரணமான வியாபாரியால் செய்யக்கூடிய காரியமல்ல. ஆனால் அவர் மேல் வரி போடுவதற்காக எந்த விதமான சாட்சிகளையும் டிபார்ட்மென்டிலிருந்து சொல்லிவிட முடியும். டிபார்ட்மென்ட்காரர்கள் சுலபமாக ப்ரூப் செய்து விடுவார்கள். ஆனால் சாதாரண வியாபாரியால் டிஸ்-ப்ரூவ் செய்ய முடியாது. "The fundamentals of justice is that everything should be proved" என்றிருக்கிறது. அப்படியிருக்கும்போது Burden of proof-ஐ வியாபாரியின் மேல் போடுவது என்பது பொருத்தமல்ல. இரண்டு வியாபாரிகளுக்குள் தகராறு ஏற்பட்டிருந்தாலும்கூட, அதன் மூலமாக இன்னொருவருடைய கணக்கை வைத்துக்கொண்டு தங்களுடைய வாதங்களை நிரூபித்துவிடுவார்கள். ஒவ்வொரு விசாரணையிலும் டிப்பார்ட்மென்ட்தான் சாட்சியாக இருந்து கொண்டிருக்கிறது. ஆகவே initial burden of proof -ஐ வியாபாரியின் மேல் இருக்கக் கூடாது. இது சர்க்காரின் பேரில்தான் இருக்கவேண்டும். ஆகவே இப்பேர்ப்பட்ட சந்தர்ப்பங்களில் டிப்பார்ட்மென்டுக்குத்தான் இந்த பொறுப்பை கொடுக்க வேண்டும், இல்லையென்றால், மிகவும் "அப்ரஸீவ்" கிளாஸாக இருக்கின்ற இதன் மூலம் யாரை வேண்டுமானாலும் என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்கின்ற நிலை வந்துவிடும். ஆகவே இதில் முன்னால் இருந்த மாதிரியே இருந்தால் போதும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் பழனிசாமி அவர்கள் சொன்னது போல், burden of proof பொறுப்பை வியாபாரிகளிடத்தில் போடுவதை விட சர்க்கார் ஏற்றுக்கொள்வதுதான் சிறந்ததாக இருக்கும் என்று நான் கருதுகிறேன். இவ்விதமான தொல்லைகளினால் அதிகாரிகள் அதிகமாக கஷ்டப்பட வேண்டியிராது. சிறு வியாபாரிகள்தான் கஷ்டப்பட வேண்டி யிருக்கும். இவ்விதம் அதிகாரிகளின்மீது போடவேண்டிய பொறுப்பை சிறு வியாபாரிகளின் மீது போடுவது என்பது நமது கட்சிக்கோ அல்லது நமது அரசாங்கத்திற்கோ நல்லது அல்ல என்றுதான் நான் நினைக்கி றேன். ஆகவே அமைச்சர் அவர்கள் இதைப்பற்றி யோசித்து தக்க விதத் தில் மாற்றச் செய்வார்கள் என்று நம்புகிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் பழனிசாமி அவர்க ளாவது வக்கீல் அல்ல, அதனால் அவர்களுக்கு இதைப்பற்றி நன்கு தெரிந்திருக்காது என்று எண்ணினேன். ஆனால் கனம் அங்கத்தினர்

அனந்தநாயகி அம்மையார் அவர்கள் வக்கீல் தொழிலில் அனுபவம் இருந்தும் கூட இதைப்பற்றி சொல்லுவதைக் கேட்டு நான் ஆச்சரியமடைகிறேன். ஒருவருக்கு வருமானம் எவ்வளவு என்று சர்க்காரால் நிரூபிக்க முடியாது. வருமானம் இவ்வளவுதான் கிடைக்கிறது என்று அந்த நபர்தான் நிரூபிக்கவேண்டும். சர்க்கார் நிரூபிக்க இயலாது. **Res-ipsa-loquitor** என்று சொல்லுவார்கள். ஒரு விஷயத்தைப்பற்றி யாருக்கு முழு விபரங்களும் தெரிகின்றதோ அவர்கள்தான் அதைப்பற்றியுள்ள விபரங்களை கொடுக்கவேண்டும். ஒரு வியாபாரி ஒரு பண்டத்தை ஒருமுனை வரியின் மீது வாங்கினுரா அல்லது பலமுனை வரியின் மீது வாங்கினுரா என்றெல்லாம் சர்க்கார் சொல்ல முடியாது. எல்லா ரெவன்யூ லெஜிஸ்லேஷனிலும் இப்படித்தான் இருக்கக்கூடும். இந்தியன் பீனல் கோடிலும்கூட இவ்விதம்தான் இருக்கிறது. ஆகவே இது மிகவும் "அப்ரஸிவ்" கிளாஸாக இருக்கிறது என்று சொல்ல முடியாது. ஒரு வியாபாரியை தனக்கு வேண்டிய எல்லா விபரங்களையும் தெரிந்திருக்கக்கூடிய ஒருவரை சட்டத்தின் பிரகாரம் வேண்டிய விபரங்கள் கொடுக்கவேண்டும் என்று சொல்லுவது எந்த விதத்திலும் தவருகாது. அதல்லாமல் சர்க்காருக்குத்தான் இந்த பொறுப்பு இருக்கவேண்டும் என்று சொல்லுகிற சட்டம், எந்த நாட்டிலும் எந்த சட்டமும் கிடையாது என்பதையும் நான் தாழ்மையோடு தெரிவித்துக்கொள்கிறேன். அதோடு இப்போது இருப்பது போலவே இருந்தால் போதும் என்று தெரிவித்தார்கள். 1939-வது வருஷத்திய சட்டத்தில் செக்ஷன் 3 (5)-ல் இருப்பது போலத்தான் இப்போதும் அமைக்கப்பட்டிருக்கிறது. ஆகவே இதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

The amendment was put and lost.

The clause was put and carried.

*Clause 11.*

DEPUTY SPEAKER: The motion is:

"That clause 11 do stand part of the Bill."

SRI N. K. PALANISAMI : ஸார், இப்போது சாதாரணமாக வரி எவ்வளவு கொடுக்க வேண்டுமென்று வரிவிதிப்பு அதிகாரி சொல்லுகிருரோ அதன்படி கொடுக்க வில்லையானுல், உடனே மாஜிஸ்ட்ரேட்டிடம் போய் சொன்னுல் உடனே சம்மன் அனுப்பி ஒன்றும் விசாரிக்காமல் போலீஸாரைக் கொண்டு கூட்டிக்கொண்டு வரச் சொல்லுகிருர்கள். இந்த மாதிரி சம்மனை அனுப்பி வியாபாரிகளை கூட்டிக்கொண்டு வரச் சொல்வது நியாயமா என்றுதான் கேட்க ஆசைப்படுகிறேன். ஆகவே இதை அவசியம் மாற்ற வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அவர்கள் இந்த சட்டத்தின் எல்லா ஷரத்துக்களையும் நன்ருக கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இதில் வரி விதிப்பு சம்பந்தமாக எந்த விதமான குறைபாடுகள் இருந்தாலும், அதைப்பற்றி அப்பீல் செய்வதற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. முதலாவது அப்பீலும், அதற்கு மேல் அப்பலட் ட்ரிப்யூனலும், அதற்கு மேல் ஹைகோர்ட்டுக்கு போவதற்கும் உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது. இதில் கடைசியாக தீர்மானம் செய்யப்பட்ட முடிவின் பிரகாரம் வரி கொடுக்காமல் இருந்தால் மாஜிஸ்ட்ரேட் மூலம் வசூலித்துக்கொள்ள முடியும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதல்லாமல் விசாரிக்காமல் போலீசாரை அனுப்பி வியாபாரிகளைக் கொண்டு வருவதுதான் இதன் நோக்கம் என்று கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்வார்களானுல், கனம் அங்கத்தினர் அவர்கள் இதை நன்ருகப் புரிந்து கொள்ளாமல்தான் சொல்லுகிருர் என்றுதான் சொல்ல முடியும். ஆகவே இவ்விதம் அமைத்திருப்பது நியாயமற்றது என்று

12th February 1959] [Sri R. Venkataraman]

சொல்ல முடியாது. ஆகவே வரி வசூலிப்பதில் இப்போது அமைத்திருக்கின்ற முறையில் எந்தவிதமான தவறுமில்லை என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன் ஆகவே இதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

The clause was put and carried.

## *Clause* 12.

DEPUTY SPEAKER : The motion is—

"That clause 12 do stand part of the Bill."

SRI S. LAZAR : Sir, I move—

"In sub-clause (1) *for* the words 'on the basis of prescribed return', *substitute* the words 'on the basis of the prescribed return'."

SRI D. DASARATHAN : I second the amendment.

SRI N. K. PALANISAMI : I move—

"In sub-clause (2), *for* the words and figure 'if no return is submitted by the dealer under sub-section (1),,' *substitute* the words and figure 'if no return is submitted under sub-section (1) by the dealer whose turnover is more than Rs. 50,000'."

"In sub-clause (2), *for* the word 'consider', *substitute* the word 'be'."

SRI N. MARUDACHALAM : I second the amendment, Sir.

SRI S. LAZAR : Sir, I move—

"In sub-clause (2), *for* the words 'to the best of its judgment', *substitute* the words 'to the best of its judgment based on the prescribed guides to assessment'."

SRI D. DASARATHAN : I second the amendment.

SRI N. K. PALANISAMI : I move—

"In sub-clause (3), *omit* the words and figure 'sub-section (2)'."

SRI N. MARUDACHALAM : I second the amendment.

SRI S. LAZAR : Sir, I move—

"Omit sub-clause (3)".

The amendment was duly seconded.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I move—

"In sub-clause (3) *for* the words 'one and a half times', *substitute* the words 'an equal amount of'."

The amendment was duly seconded.

[12th February 1959

MR. SPEAKER: The clause and the amendments are before the House for discussion.

SRI N. K. PALANISAMI: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, முக்கியமாக, நேற்றுப் பேசிய காலத்திலே குறிப்பிட்டேன் "பெஸ்ட் ஆப் ஜட்ஜ்மெண்ட்"-ஐப்பற்றி இதைப்பற்றி இந்தச் சபையிலே அடிக்கடி பேசியும்கூட, சரியான பதில் கிடைத்தது கிடையாது. "பெஸ்ட் ஆப் ஜட்ஜ்மெண்ட்" இன்னும் ஆர்பிட்ரரியாகத்தான் இருக்கிறது. ஒரு வரி ஆபீஸர் ஒரு ஹோட்டலுக்குப் போய் டோடல் எக்ஸ் பெண்டிசர் என்ன என்று கேட்டு, பொய்க் கணக்கு எழுதியிருப்பதாகச் சொல்லி, அதன் மீது 4 மடங்கு போடுகிறார். இன்னொருவர் 6 மடங்கு போடுகிறார். இது "பெஸ்ட் ஆப் ஜட்ஜ்மெண்ட்" ஆகாது, "வொர்ஸ்ட் ஆப் ஜட்ஜ்மெண்ட்" ஆகத்தான் ஆகும். போடக்கூடிய ரூலில் இதுதான் "பெஸ்ட் ஆப் ஜட்ஜ்மெண்ட்" என்று இருக்கிறதா ? இல்லையென்றால் எதை வேண்டுமானாலும் "பெஸ்ட் ஆப் ஜட்ஜ்மெண்ட்" ஆகத்தான் சொல்லி விடலாம்.

அடுத்தபடியாக, உப பிரிவு (2)-ல் "தி அஸெஸிங் அத்தாரிடி ஷல் ஆப்டர் மேகிங் ஸச் என்க்வயரி ஆஸ் இட் மே கன்ஸிடர் நெஸஸரி" என்று இருக்கிறது. சாதாரணமாக ஒரு டீலர் இருக்கலாம், அல்லது ஒரு வியாபாரி இருக்கலாம். அவரைக் கணக்கைக் கொண்டு வாருங்கள் என்று சொல்லலாம். அப்போது அந்த அஸெஸிங் அத்தாரிடி அது சரியானதல்ல என்று எண்ணினால், அவருக்குத் தகுந்தாற்போல்—வியாபாரிக்குத் தெரிவித்தாலும் தெரிவிக்கலாம், தெரிவிக்காமலும் இருக்கலாம்—ஏதோ விசாரணை செய்து முடிவு செய்யலாம் என்ற முறையில் இருக்கிறது. ஆகையால் "கன்ஸிடர்" என்ற வார்த்தைக்கு பதிலாக "பீ" என்ற வார்த்தையைப் போட்டுக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். "அஸெஸ் தி டீலர் டு தி பெஸ்ட் ஆப் இட்ஸ் ஜட்ஜ்மெண்ட்" என்று இருப்பதால் வரி போடுவது எவ்வளவு என்று தெரியாமல் போடுவதாக இருக்கிறது. அதற்கு 1½ மடங்கு "பெனல்ட்டி" போடுவது அநியாயம். ஆகையால்தான் "ஸப்-செக்ஷன் (2)" என்பதை நீக்கிவிடவேண்டுமென்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். அதையும் சர்க்கார் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM: ஸார், இந்தப் பிரிவிலே வரி விதிக்கக்கூடிய அதிகாரி தன்னுடைய யுக்தம்போல, எது உசிதம் என்று தோன்றுகிறதோ அந்த அடிப்படையில், வரியை நிர்ணயிக்கக்கூடிய சந்தர்ப்பம் ஏற்படும்போது நிர்ணயிக்கலாம் என்று இருக்கிறது. எல்லாச் சந்தர்ப்பங்களிலும் நிர்ணயிக்கலாம் என்று அர்த்தமில்லை என்று சர்க்கார் சொல்லலாம். நான் அதை ஒப்புக்கொள்கிறேன். ஒரு வியாபாரி வேண்டுமென்றே தவறான கணக்கைக் காண்பித்தால், வேண்டுமென்றே அரசாங்கத்தை ஏமாற்றினால் என்ன செய்வது? அந்த மாதிரி சந்தர்ப்பங்களில் அவைகளைத் தடுக்க அரசாங்கத்திற்கு அதிகாரம் வேண்டாமா என்று கேட்கலாம். ஏமாற்றக் கூடிய முறையில் கணக்குக் காட்டும் வியாபாரிகளுக்கு அனுதாபம் காட்டவேண்டுமென்பது எனது நோக்கமல்ல. இப்போது இருக்கும் நிலையில் சாதாரணமாகக் கூட ஒழுங்கீனமாக நடக்கக்கூடிய அதிகாரிகளிடம் இந்த வியாபாரிகளை பயமுறுத்தக் கூடிய அதிகாரம் கொடுக்கப்படுகிறது. ஆகையால் அதை ஓரளவு கட்டுப்படுத்தவேண்டுமென்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். என்னுடைய யோசனைக்கு ஆதாரமாக டாக்டர் லோகநதான் அவர்கள் என்ன சொல்லியிருக்கிறார் என்பதை அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்கு மீண்டும் ஒரு முறை கொண்டு வர விரும்புகிறேன். அவர் சொல்வது "I am convinced that a lagre part of the present discontent is due to the department's failure to maintain good public relations. வரியைக் குறைத்து விட்டால் மட்டும் போதாது, அதிகாரிகள்

12th February 1959 [Sri M. Kalyanasundaram]

நடந்து கொள்ளக்கூடிய முறையைப் பொருத்திருக்கிறது '' என்று, கூறியிருக்கிறார். அதோடு கூட 'Best of Judgament' எவ்வளவு சங்கடமாக இருக்கிறது என்று கூறியிருக்கிறார்.

" 'Best of Judgment' assessments should in no case be made on small dealers (i.e. those with turnovers less than Rs. 25,000 a year)- In other cases, Best of Judgment assessments may be made but the assessing officer must give sufficient reasons to justify his 'judgment, அதாவது, விசேஷமான சந்தர்ப்பங்களில்தான் யுத்தம் போல வரியை நிர்ணயிக்கிறார்களாதலால், அப்படி வரியை நிர்ணயிப்பதற்கான காரணங்களைக் கொடுக்கவேண்டுமென்று டாக்டர் லோகநாதன் அவர்கள் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்: "The assessing authority shall after making such enquiry as it may consider necessary." அதாவது அந்த அதிகாரி தன் இஷ்டம் போல் விசாரணைநடத்தலாம், அவன் தன்னுடைய பியூனைக் கேட்டால் கூட அது விசாரணையாகி விடும், அல்லது அந்த வியாபாரிக்கு எதிராக இருப்பவர்களை விசாரித்து முடிவு செய்யலாம். முடிவு என்ன என்று ரெகார்ட் செய்யவேண்டுமென்று இந்தப் பிரிவில் இல்லை. என்னுடைய யோசனை என்னவென்றால் "The assessing authority shall after making such enquiry as it may consider necessary and after recording its conclusions" என்று சேர்க்கப்படுமானால், இந்தப் பிரச்னை தீர்ந்துவிடும். அவர்களுடைய அதிகாரம் கட்டுப்படுத்தப்படும். என்ன முடிவுக்கு வருகிறார்களோ, அதை எழுதி விட்டால், அப்பீல் செய்யக்கூடிய நேரத்தில் உதவியாக இருக்கும். ஆகையால் இதை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும். நான் இந்தத் திருத்தத்தை கொடுத்திருந்தேன். குறிப்பிட்ட நேரத்தில் அனுப்ப முடியாதகாரணத்தினால் அந்தத் திருத்தம் இங்கு வருவதற்குச் சந்தர்ப்பம் இல்லாமல் போய் விட்டது. ஆகையால் இதை ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பெருமளவில் இந்தப் பிரிவும் பாதிக்காமல் நியாயமான வியாபாரிகளுக்கு தொந்தரவு ஏற்படக் கூடிய சமயத்தில் பயன்படுத்திக் கொள்ள சந்தர்ப்பம் ஏற்படும். அதோடு கூட டாக்டர் லோகநாதன் அவர்களுடைய சிபாரிசை ஏற்றுக்கொண்டதாக இருக்கும்.

அதோடு கூட, வியாபாரிக்கே பாதகமாக எல்லாப் பிரிவும் வந்திருக்கிறது. எவ்வளவு வரி விதிக்கவேண்டும் என்பதை அதிகாரியிடத்தில் விட்டு, அதற்கு எதிராக வாதாட வேண்டிய எல்லாப் பொறுப்பும் வியாபாரிக்கே இருக்கிறகாரணத்தினால், அவர்களுக்கு பாதுகாப்புக் கொடுக்கும் முறையில் செய்யக்கூடிய முடிவுகளை ரெகார்ட் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**Sri S. LAZAR:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, முதல் திருத்தமானது, ஒன்றாவது உப பிரிவிலே, முதல் வரியிலே "The assessement of a dealer shall be on the basis of the prescribed return relating to his turnover ...."

The article 'the' is absolute necessary in between the words 'of' an 'prescribed'.

The assessment of a dealer shall be on the basis of the prescribed return என்பதில் 'the' என்ற வார்த்தையைச் சேர்க்கவேண்டுமென்று கொடுக்கப்பட்டுள்ளது. காரணம் எந்த ரிடர்னும் அல்ல, "Relating to his turnover" என்பதால் 'the' என்ற வார்த்தை இருக்கவேண்டும்.

[Sri S. Lazar] [12th February 1959

இரண்டாவது திருத்தம், "Do the best of Judgment" என்று சொல்லுகிறபோது இப்போது இருக்கக்கூடிய அதிகாரிகள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு கொள்கையை அடிப்படையாகக் கொண்டு அவர்களுடைய தீர்ப்பைக் கொடுக்கிறார்கள். அதைக் கொண்டு அஸெஸ்மெண்ட் போடப்படுகிறது. டாக்டர் லோகநாதன் அவர்கள் குறிப்பிட்டுச் சொல்லியிருப்பது, இந்த விவகாரங்களில் அரசாங்கத்திற்கு ஏற்பட்ட அனுபவங்களில் அடிப்படையில் ஒரு "கைட்—ஐ", எப்படி அஸெஸ்மெண்ட் செய்ய வேண்டுமென்பதைப் பற்றி, அனுபவத்தை வைத்துக்கொண்டு ஒரு "கைட்" ஒன்றைத் தயாரித்து, சட்ட திட்டங்களை வகுத்துக் கொடுக்கவேண்டுமென்று. எந்த அளவுக்குத் தேவை என்பதைப் பார்த்தால் அப்பெல்லெட் ட்ரிப்யூனல் வரையில் வரக்கூடிய கேஸ்களில் கொடுக்கப்பட்டிருக்கக்கூடிய தீர்ப்புகளில் பார்த்தால் நன்றாகத் தெரியும். குறிப்பாக ஒரு கேஸ் எனக்கு நன்றாக ஞாபகத்தில் இருக்கிறது. கார்பண்டைஆக்ஸைட் எந்த அளவு செலவாகிறது என்பதைக் கொண்டு ஒரு அதிகாரி மனதில் தவறாகக் கொண்ட கருத்தை, அதன் பிறகு அப்பெல்லெட் டிரிப்யூனலுக்கு வந்து, குறிப்பிட்ட அளவு கார்பண்டைஆக்ஸைடில் இத்தனை சோடா பாட்டில்கள்தான் தயாரிக்க முடியும் என்று தீர்ப்பைக் கொடுத்து, அஸெஸ்மெண்ட் அதாரிட்டி கொடுத்த தீர்ப்பு சரியல்ல என்று அந்தத் தீர்ப்பைத் திருப்பி விட்டார்.

1 p.m. அதேபோல், எத்தனையோ கேஸ்கள் அரசாங்கத்தினுடைய கவனத்திற்கு வந்திருக்கக்கூடும். ஆகவே, எந்த அடிப்படையிலே அஸெஸ் பண்ணவேண்டும் என்ற முறையை, ஒரு கட்டுப்பாட்டை பாரத்திலே ஏற்படுத்திக் கொடுத்தால், அது மக்களுக்கு ரொம்ப சௌகரியமாக இருக்கும் என்ற முறையிலேதான், அதை ஒரு திருத்தமாக நான் கொடுத்திருக்கிறேன்.

நான் கொடுத்திருக்கும் மூன்றாவது திருத்தம், மூன்றாவது உப பிரிவிலே யாராவது ஒருவர் சரியான கணக்கு கொடுக்கவில்லையானால், அப்பேர்ப்பட்டவருக்கு, கணக்கைப் பரிசீலனை செய்யக்கூடிய அதிகாரி ஒன்றரை மடங்கு அபராதம் விதிக்கலாம், ஏற்கனவே கொடுக்கும் வரியை விட, என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. 45-வதுபிரிவிலே, இதுபோன்று தவறு செய்கின்றவர்களுக்குக் கடுமையான தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது. இது போன்ற காரியங்களிலே வியாபாரிகளைப் பொறுத்த வரையில், அவர்களை மிரட்டி வைக்கவேண்டும் என்பது மிக மிக அவசியம் என்பதை நான் ஒத்துக்கொள்கிறேன். ஆனால், ஏற்கனவே பொது விவாதத்தில் எடுத்துச் சொன்னது போல், அவர்கள் தவறு செய்வார்களானால், ப்ராஸிக்யூஷன் செய்து நடவடிக்கை எடுக்க முடியும் என்று பிரிவு 45—இல் இருக்கும்போது, இந்த இடத்திலே வரியோடு கூட ஒன்றரை மடங்கு அபராதம் விதிக்க வேண்டிய அவசியம் இல்லை என்று கருதி, மூன்றாவது பிரிவு தேவை இல்லை என்ற முறையிலே திருத்தம் கொடுத்திருக்கிறேன். இவைகளைப் பரிசீலனை செய்து அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்று நான் எதிர்பார்க்கிறேன்.

*THE HON. SRI R. VENKATARAMAN: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் திரு. லாஸர் அவர்கள் கொடுத்திருக்கும் 60—வது திருத்தத்தை, "In sub-clause (1), *for* the words, 'on the basis of the prescribed return' *substitute* the words son the basis of the prescribed return." நான் ஏற்றுக்கொள்ளுகிறேன்.

அடுத்தப்படியாக, இந்த ஷரத்தைப்பற்றி ஏதோ சர்க்கார் என்ன காரணம் என்று சொல்லாமலேயே, best of the Judgment என்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று கனம் அங்கத்தினர் திரு. பழனிசாமி அவர்கள் சொன்னார்கள். இப்பொழுது ஒரு வியாபாரி கணக்கைக் கொடுக்காமலோ, அல்லது அரை குறையாகக் கொடுத்தாலோ, அல்லது வேண்டுமென்று சில விற்பனைகளை அதில் சேர்க்காமல் கொடுத்தாலோ என்ன செய்வது என்று திரு. பழனிசாமி அவர்களேயே சொல்லும்படியாகக்

கேட்டுக்கொள்ளுகிறேன். அதுதான் இப்பொழுது சட்டத்தில் போட்டிருக்கிறோம். சட்டத்தில் என்ன சொல்லியிருக்கிறோம் என்றால், " incomplete returns " அல்லது " incorrect report " இதெல்லாம் கொடுப்பார்களானால், அந்த அதிகாரி best of judgment assessment செய்யலாம். அவ்வாறு " பெஸ்ட் ஆப் ஜட்ஜ்மெண்ட் அஸெஸ்மெண்ட் செய்வதற்கு இரண்டு கண்டிஷன்கள் ப்ரீஸிடெண்டாக அமைந்திருக்கவேண்டும். ஒன்று, கணக்கு தவறாக இருக்கவேண்டும் அல்லது அரைகுறையாக இருக்கவேண்டும். அவ்வாறு இருக்குமானால் உடனே அவர் இவ்வளவு ரூபாய் என்று வரி விதித்து விடுவது இல்லை. அவர் அந்த வியாபாரிக்கு "ரீஸனபிள் ஆப்பர்ட்யூனிடி" கொடுக்கவேண்டும். அதாவது தங்களுடைய கணக்குகள் சரியாக இருக்கின்றன என்று நிரூபிப்பதற்கு சந்தர்ப்பம் கொடுத்து, அதன் பிறகுதான் அவர் "அஸெஸ்மெண்ட்" செய்யவேண்டும். "ப்ரொவைஸோவைப் பார்த்தால், அதில் அந்த விதமாகத்தான் இருக்கிறது. "ரீஸனபிள் ஆப்பர்ட்யூனிடி" கொடுத்துத்தான் செய்யவேண்டும் என்று அதில் கண்டிருக்கிறது. ஆகையால் இந்தப் ப்ரொவைஸோ இருக்கும்போது இது எந்த விதத்தில் பாதிக்கும் என்று சொல்வது எனக்குப் புரியவில்லை. அவர்கள் கணக்குகளையும் கொடுக்காமல் கணக்குகள் சரியா என்று நிரூபிப்பதற்குச் சந்தர்ப்பம் கொடுத்தபோதிலும், கணக்கு சரி என்று நிரூபிக்காமலும் இருந்தால் அவர் மீது "பெஸ்ட் ஆப் ஜட்ஜ்மெண்ட்" விதிக்கக்கூடாது என்று சொன்னால், இந்த வாதம் ஏதோ திடீரென்று வியாபாரிகளிடத்தில் நண்பர் திரு. பழனிசாமி அவர்களுக்கு ஏற்பட்ட ஒரு மோகத்தின் காரணமாக...

**SRI N. K. PALANISAMI :** டாக்டர் லோகநான் அவர்கள், 50 ஆயிரம் ரூபாய்க்கு மேல்தான் வைக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்.

***THE HON. SRI R. VENKATARAMAN :** ரூபாய் 25,000–க்கு மேற்பட்ட இடத்தில் " பெஸ்ட் ஆப் ஜட்ஜ்மெண்ட் " விதிக்கவேண்டும் என்று டாக்டர் லோகநாதன் சொல்லியிருக்கிறார். "கம்பவுண்டிங் ரேட்ஸ்" வந்த பிறகு இந்த அவசியமே ஏற்படவில்லை. ஏதோ டாக்டர் லோகநாதன் சொன்னதை நாங்கள் மாற்றிவிட்டோம் என்று மனதிலே வைத்துக்கொண்டிருப்பதை கனம் அங்கத்தினர் அவர்கள் தயவுசெய்து மறந்துவிடும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். இரண்டே விஷயங்களில்தான் நாங்கள் டாக்டர் லோகநாதன் சொன்னதை ஏற்றுக்கொள்ளவில்லை. அதில் வரி விதிப்பு விகிதமும் ஒன்று ; மற்றப்படியெல்லாம் அவர் சொன்னபடித்தான் செய்திருக்கிறோம். ஆகவே, இந்த ஷரத்து மிக நியாயமானது, பொருத்தமானது. இதில் தவறு ஒன்றுமில்லை. " பெஸ்ட் ஆப் ஜட்ஜ்மெண்ட் " அஸெஸ்மெண்ட் போடுவதற்கு முன்னால், வரி போடலாமா, வேண்டாமா என்பதற்கான காரணங்களைக் காட்ட சந்தர்ப்பம் அளிக்கப்பட்டிருக்கிறது. அதற்கு மேல் அப்பீல் முதலியவைகளெல்லாம் இருக்கின்றன. ஆகவே, இந்த ஷரத்தை ஏற்றுக்கொள்ளும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

The amendment of Sri S. Lazar to sub-clause (1) was put and carried.

The two amendments of Sri N. K. Palani-ami to sub-clause (2) were put and lost.

The two other amendments of Sri S. Lazar were by leave, withdrawn.

The amendments of Sri N. K. Palanisami and Sri K. Sattanatha Karayalar to sub-clause (3) were put and lost.

The clause, as amended, was put and carried.

*Clause* 13.

DEPUTY SPEAKER : The motion is :

' That clause 13 *do* stand part of the Bill '.

SRI N. K. PALANISAMI : Mr. Deputy Speaker, Sir, I move

" In sub-clause (1), *for* the word ' fixed ', *substitute* the word ' prescribed '."

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

SRI N. K. PALANISAMI : ஏற்கனவே பழைய சட்டத்தில் ஒரு மாதம் வரையில் டைம் இருக்கிறது. ' fixed ' "என்ற பதத்தை உபயோகிக்கும் காலத்தில் அதிகாரி தம் இஷ்டம்போல் சிலருக்கு ஒரு மாதமோ, இன்னும் சிலருக்கு 24 நாட்களோ, டைம் கொடுக்க இடம் ஏற்படும். யூனிபார்ம் ஆக " டைம் ப்ரிஸ்க்ரைப் " பண்ண வேண்டிய அவசியம் இருப்பதால், "fixed" என்னும் பதத்திற்குப் பதிலாக " prescribed " என்று மாற்றிக்கொள்ளவேண்டும் என்று நான் திருத்தம் கொடுத்திருப்பதை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

SRI S. LAZAR : This clause provides for provisional assessment and sub-clause (4) says that it is subject to final assessment to be made. But what we find here is, there is sub-clause (3) and a proviso saying there is going to be a provisional assessment then to be followed by sub-clause (4) under which the provisional assessment will be subject to a final assessment. Though I have not pointed out this thing by an amendment, I would request the Hon. Minister to consider this point. There is already provision for provisional assessment on the basis of which assessment could be worked out and tax collected. In the meanwhile pending final assessment room is made for another assessment in sub-clause (3). My only submission is that that is unnecessary. There are other provisions for the purpose. In fact in this Act one notable feature is that very good opportunities are being provided for the assessees to question the assessment made. Also there are very many opportunities provided for the department to reopen assessed cases. When such is the case I think this will be another addition and this may not be necessary. I leave it to the consideration of the Hon. Minister.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் திரு. பழனிசாமி அவர்கள் கொடுத்திருக்கும் திருத்தத்தை ஏற்றுக்கொள்வதற்கில்லை. காரணம் என்னவென்றால், " ப்ரிஸ்க்ரைப்ட் " என்று நாம் போட்டிருக்கும்போது, எவ்வளவு " இன்ஸ்ட்டால்மெண்ட் "-இலே, எந்த நேரத்திலே கட்ட முடியும் என்று சொல்வதற்கு அவரவர்கள் சக்தியைப் பொறுத்து செய்ய முடியும். ஒரேயடியாக " ஒரு மாதம் " என்று சொல்லி விட்டால், பணக்காரர்கள் கட்ட முடியும் ; ஏழைகள் கட்ட முடியாது. " மௌண்ட் "

எவ்வளவு கட்டவேண்டும் என்று அவரவருக்குரியதைப் பார்த்துத்தான் கட்ட வேண்டும்; நிர்ணயமாகச் சொல்ல முடியாது. அதனால் ஒத்துக் கொள்ள முடியவில்லை.

I could not quite catch the point made by the hon. Member Sri Lazar. I will be grateful if he can explain it.

DEPUTY SPEAKER : The hon. Member may state his point again.

SRI S. LAZAR : 13-வது பிரிவிலே "ப்ரொவிஷனல் அஸெஸ்மெண்ட்" ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அந்தச் சமயத்திலே அதிகாரிகள் ஒரு கணக்கை வைத்துக்கொண்டு அதிலே ஒரு அஸெஸ்மெண்ட் செய்ய முடியும் என்ற முறையிலே அமைந்திருக்கிறது. அஸெஸ்மெண்ட் ஏற்படுத்தியதற்குப் பிறகு, அந்த வியாபாரி அந்த வரியைத் தொடர்ந்து கொடுத்துக் கொண்டேயிருப்பான். ஆனால், கடைசியில் "பைனல் அஸெஸ்மெண்ட்" என்று நான்காவது உப பிரிவிலே கொடுக்கப்பட்டிருக்கிறது. அதனால் அஸெஸ்மெண்ட் முடிகிற வரைக்கும் அமுலில் இருக்கும் என்ற ரீதியில் கூட, குறைகள் இருந்தால் "பைனல் அஸெஸ்மெண்ட்"-இலே சரியாய் விடும். அதற்கிடையே ஒரு தடவை "ப்ரொவிஷனல் அஸெஸ்மெண்ட்" செய்து விட்டு, தவறாக இருந்தால் ப்ரொவிஷனல் அஸெஸ்மெண்ட் செய்ய முடியும் என்று மூன்றாவது உப பிரிவும், அதனுடைய ப்ரொவைஸோவும் அமைந்திருக்கின்றன. ஆகையால், என்னுடைய கருத்து, "ப்ரொவிஷனல் அஸெஸ்மெண்ட்"-க்கு இன்னொரு ப்ரொவிஷனல் அஸெஸ்மெண்ட் தேவையில்லை. ஒரு தடவை ப்ரொவிஷனல் அஸெஸ்மெண்ட் செய்து விட்டால் கூட, குறைகள் இருப்பதை "பைனல் அஸெஸ்மெண்ட்"-டில் பார்த்துக்கொள்ளலாம் என்ற காரணத்தால் அதற்கு மீண்டும் ஒரு முறை இன்னொரு ப்ரொவிஷனல் அஸெஸ்மெண்டுக்கு இடம் வைக்க வேண்டியதில்லை என்ற முறையில் மூன்றாவது உப பிரிவும், மூன்றாவது உப பிரிவிலே இருக்கும் ப்ரொவைஸோவும் தேவையில்லை என்று நான் எடுத்துச்சொல்கிறேன்.

*THE HON. SRI R. VENKATARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, எக்ஸ்ட்ரா-ஆர்டினரி சிட்சுவேஷன் அதாவது எதாவது எதிர்பாராத ஒரு நிலைமை ஏற்பட்டால் அதை சமாளிக்க போடப்பட்ட ஷரத்து இது. ஒவ்வொரு ப்ரொவிஷனல் அசஸ்மெண்டையும் இவ்விதம் எடுத்துக்கொண்டு செய்வது என்று நினைப்பதற்கு இல்லை. ப்ரொவிஷனல்அஸெஸ்மெண்ட் சாதாரணமாக குறைவாக இருந்தால் அதாவது "too law a turn over or too low a rate"-ஆக இருந்தால் அதாவது குறைவாக அசெஸ்மெண்ட் செய்திருந்தால் அதை சரி செய்வதற்காகத் தான் இதைப் போடப்பட்டிருக்கிறது. இதை மட்டும் எடுத்து சரிப்படுத்துவதற்குத்தான் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட அதிகாரம் கொடுப்பதால் எதாவது புதியதாக கஷ்டம் விளைந்து விடும் என்று சொல்வதற்கு இல்லை. எனென்றால் இந்த அதிகாரத்தை எந்த சமயத்தில் உபயோகிக்க வேண்டுமோ அந்த சமயத்தில் தான் உபயோகப்படுத்தப்படும். அதாவது மிகவும் குறைவாக அசெஸ்மெண்ட் செய்திருந்தாலும் அல்லது மிகக் குறைவாக ரேட்டு போட்டிருந்தாலும் அதை சரி செய்வதற்குத்தான் இது போடப்பட்டிருக்கிறது. வியாபாரிகள் எதாவது காரணம் காட்டினால் அவர்களுக்கு சந்தர்ப்பம் கொடுத்து அதன் பிறகு தான் இதைப் போட முடியும். அதனால் இந்த திருத்தத்தை ஏற்றுக்கொள்வதற்கு இல்லை.

The amendment was put and lost.

The clause was put and carried.

*Clause* 14.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—

" In sub-clause (1), *for* the words ' with correct ', *substitute* the words ' with the correct '."

" In sub-clause (2), *for* the words ' under the fresh assessment ', *substitute* the words ' as a result of the fresh assessment '." words ' forty '."

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

" In sub-clause (1) *for* the word ' thirty ', *substitute* the word ' forty '.

SRI M. P. SARATHI : I second the amendment, Sir.

SRI S. M. ANNAMALAI : ஸார், அஸெஸ்மெண்ட் நோட்டீஸ் கொடுத்த முப்பது நாட்களுக்குள் ரி அசெஸ்மெண்டுக்கு மனுச் செய்து கொள்ள வேண்டும் என்று கண்டிருக்கிறது. அந்த நாட்கள் போதாது. இந்த முப்பது நாட்களுக்குள் ஒருவரால் கணக்குகளை தயாரிக்க முடியாது, அதிகப்படியான நாட்கள் வேண்டியதாக இருக்கும் என்பதற்காக முப்பது நாட்கள் என்று இருப்பதை நாற்பது நாட்கள் என்று மாற்றிக்கொள்ள வேண்டும் என்ற திருத்தம் கொடுத்திருக்கிறேன். சாதாரணமாக அதிகாரிகள் கணக்கு வேண்டும் என்று கேட்டவுடன் உடனடியாக கணக்குகளைக் கொடுக்க முடியாது. கணக்குகளை தயாரிக்க சாதாரணமாக கால தாமதம் ஆகும். அதனால் குறைந்த பட்சம் நாற்பது நாட்கள் என்று போட்டால் நலமாக இருக்கும் என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன். இது சாதாரணமாக ஒரு சிறிய திருத்தம்தான். இதை கனம் அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்வார் என்றே நினைக்கிறேன்.

SRI S. LAZAR : ஸார், க்ளாஸ் 14 இரண்டாவது பாராவில் அப்ளிகேஷன் என்ற வார்த்தையில் " எ " என்பதற்கு பதிலாக " ஒ " என்று இருக்கிறது. அது ஸ்பெல்லிங் மிஸ்டேக் என்றே நினைக்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : அது அச்சுப்பிழை தான். அதை சாதாரணமாக நாம் திருத்திக்கொள்ளலாம்.

முப்பது நாட்கள் என்று இருப்பதை நாற்பது நாட்கள் என்று திருத்த வேண்டுமென்று சொல்வதை ஒத்துக்கொள்வதற்கு இல்லை. சாதாரணமாக முப்பது நாட்களிலேயே கணக்குகளைத் தயாரித்துக் கொடுத்து விடலாம். அனுபவத்தை ஒட்டிப் பார்க்கும்போது அது முடியும் என்று தான் தோன்றுகிறது. அதனால் முப்பது நாட்கள் என்று இருப்பதை நாற்பது நாட்கள் என்று ஒத்துக்கொள்வதற்கு இல்லை. முப்பது நாட்கள் என்று இருந்தால் தலை போய் விடாது. அதிலேயே அதிகாரமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. முப்பது நாட்களுக்குள் கணக்குக்கொடுக்க முடியவில்லை என்று சரியான காரணம் காட்டினால் அவர்களுடைய அசெஸ்மெண்டை கான்செல் செய்து விட்டு ப்ரெஷ் அசெஸ்மெண்ட் செய்யலாம் என்று கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே முப்பது என்று இருப்பதை மாற்றுவதற்கு இல்லை என்பதை மட்டும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

The Government amendments were put and carried.

The amendment of Sri Annamalai was put and lost.

The clause as amended was put and carried.

Clause 15 was put and carried.

*Clause* 16.

SRI N. K. PALANISAMI : I move—

"In sub-clause (1), *for* the words 'with correct', *substitute* the word 'be'."

The amendment was duly seconded.

SRI S. LAZAR : Sir, I move—

"In sub-clause (1) *for* the words 'five years', *substitute* the words 'three years'."

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : I second the amendment, Sir.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

"In sub-clause (2), *for* the word 'satisfied', *substitute* the word 'proved'."

The amendment was duly seconded.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I move—

"In sub-clause (3), *for* the words 'can be exercised', *substitute* the words 'may be exercised'."

This is a purely technical thing.

SRI. N. K. PALANISAMI : ஸார், என்னுடைய 72-ஆவது திருத்தமாகிய சப் க்ளாஸ் 2-ல் "சாட்டிஸ்பைட்" என்ற வார்த்தைக்குப் பதிலாக "ப்ரூவ்டு" என்ற வார்த்தையைப்போட வேண்டும் என்பது. இது ஒரு சாதாரணமான திருத்தம். உண்மையிலேயே ப்ரூவ் பண்ண வேண்டும் என்பது தான் இதனுடைய அர்த்தம். அதிகாரி Satisfy ஆகவில்லையென்றால் எதையும் தள்ளிவிடலாம். Prove ஆக வேண்டும் என்று இருந்தால் நல்லது என்பதற்காகத்தான் இந்த திருத்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, இதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI S. LAZAR : ஸார், என்னுடைய 71-ஆவது திருத்தத்தில் ஐந்து வருஷம் என்று இருப்பதை மூன்று வருஷம் என்று திருத்திக் கொள்ள வேண்டும் என்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். காரணம் இந்தப் ப்ரோவிஷன் சம்பந்தப்பட்ட வரையில் ஐந்து வருஷத்திற்குள் திருப்பவும் அஸெஸ் செய்யலாம் என்றும் அதை ரீ ஓபன் பண்ணலாம் என்றும் இருக்கிறது. அதே மாதிரி 34-ஆவது செக்ஷன் 2-சி பிரிவில் "more than four years have expired after the passing of the order" என்று இருக்கிறது. யுனிபார்மாக சட்டத்தில் இருக்க வேண்டும் என்பதற்காக ஐந்து வருஷம் என்பதற்கு பதிலாக மூன்று வருஷம் என்று மாற்ற வேண்டும் என்று சொல்லுகிறேன். அதே மாதிரி 34-ஆவது பிரிவிலும் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் இந்தத் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். ஆகவே இதைப்பற்றி கனம் அமைச்சர் அவர்கள் பரிசீலனை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : ஸார், கனம் பழனிசாமியின் 70-ஆவது திருத்தம் அவசியமில்லை. அடுத்தபடியாக கனம் லாஸர் அவர்கள் சொல்வதுபோன்று எல்லா இடங்களிலும் மூன்று வருஷங்கள்

[Sri R. Venkataraman] [12th February 1959

என்று போட வேண்டும் என்று சொல்வது பொருத்தமில்லை. ஒவ்வொன்றுக்கும் ஒரு லிமிடேஷன் கொடுக்க வேண்டும் என்பதில்லை. வரி கொடுக்காமல் எமாற்றும் தொகையைப்பற்றி டரன்வோவர் சம்பந்தப்பட்ட மட்டில் ஐந்து வருஷங்கள் வரையில் சர்க்காருக்கு அதிகாரம் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் ஐந்து வருஷம் என்று போடப்பட்டிருக்கிறது. யுனிபாரமாக போட வேண்டியதில்லை. மூன்று வருஷங்கள் கழித்து சர்க்கார் வரியை இழந்து விடவேண்டும் என்று சொல்வது சரியல்ல, அது நியாயமாகாது. இதேபோல் வருமான வரி சட்டங்களைப் பார்த்தாலும் அங்கே எழு அல்லது எட்டு வருஷங்கள் என்று கூட போட்டிருக்கிறார்கள். ஆகவே ஐந்து வருஷங்கள் என்று போட்டிருப்பது தவறு என்று சொல்வதற்கு இல்லை.

The Government amendment was put and carried.

The amendment of Sri S. Lazar was, by leave, withdrawn.

The amendments of Sri Palanisami were put and lost.

Clause 16, as amended, was put and carried.

Clauses 17 and 18 were put and carried.

*Clause* 19.

DEPUTY SPEAKER: The motion is—

That clause 19 do stand part of the Bill.

SRI S. LAZAR: Sir, I move—

'*Omit* sub-clause (1)'.

The amendment was duly seconded.

SRI S. LAZAR: Sir, I am only trying to draw the attention of the Hon. Minister to the essential features of the Partnership Act. According to the provisions of the Indian Partnership Act, each partner is jointly and severally liable for all the demands made on the firm as such. While that is the case, I am not able to understand the provision here 'Where any firm is liable to pay any tax or other amount under this Act, the firm and each of the partners of the firm shall be jointly and severally liable for such payment'. Even otherwise under the Partnership Act and the general law of the country, every partner is individually liable for the entire tax. As such, my submission is, sub-clause (1) is unnecessary.

THE HON. SRI R. VENKATARAMAN: லாசர் அவர்கள் தவறு இருப்பதாகச் சொல்லவில்லை. அவசியம் இல்லை என்று சொல்லுகிறார்கள். இரண்டாவது ஷரத்து அவசியம் என்றுதான் போடப்பட்டிருக்கிறது.

The amendment was, by leave, withdrawn.

The clause was put and carried.

12th February 1959]

*Clause* 20

DEPUTY SPEAKER: The motion is—

That clause 20 do stand part of the Bill.

SRI N. K. PALANISAMI: Sir, I move—

In sub-clause (1), *for* the words "seven thousand five hundred rupees", *substitute* the words "ten thousand rupees".

The amendment was duly seconded.

SRI K. SATTANATHA KARAYALAR: Sir, I move—

In sub-clause (1), *for* the words "seven thousand five hundred", *substitute* the words "twenty thousand".

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI: Sir, I move—

In sub-clause (2)—

(i) *omit* the sentence "notwithstanding anything contained in sub-section (1)";

(ii) *omit* item (ii) and

(iii) in item (vi) *after* the words "distributing goods", *add* the words "with profit motive".

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER: The clause and the amendments are before the House for discussion.

SRI N. K. PALANISAMI: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, என்னுடைய திருத்தம் 17,500 ரூபாய் என்று ரிஜிஸ்ட்ரேஷன் கட்டணத்திற்கு வைத்திருக்கக்கூடிய லிமிட்டை பத்தாயிரமாக உயர்த்தவேண்டும் என்பதுதான். தினம் ஒன்றுக்கு 20 ரூபாய் வியாபாரம் செய்தால்கூட 7,500 ரூபாய் "டர்ன் ஓவர்" வந்து விடும். அந்த வியாபாரிக்கு ஒரு ரூபாய் அல்லது இரண்டு ரூபாய்தான் லாபம் கிடைக்கும். ஒரு நாளைக்கு வியாபாரம் செய்யவில்லை என்றாலும் அவனுக்கு நஷ்டந்தான். ஆகவே இந்த ரிஜிஸ்ட்ரேஷன் கட்டண லிமிட்டை பத்தாயிரம் ரூபாய்க்கு உயர்த்த வேண்டுமென்று மந்திரி அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI K. SATTANATHA KARAYALAR: நான் ஏற்கனவே கூறியபடி இந்த 7,500 ரூபாய் லிமிட்டானது மிக மிகக் குறைந்த வரம்பு. இந்த வரம்பை அவசியம் உயர்த்தித்தான் ஆக வேண்டும். 20,000 ரூபாய்க்கு உயர்த்தாவிட்டாலும் கூட நண்பர் பழனிசாமி அவர்கள் கூறியபடி பத்தாயிரம் ரூபாய் வரை என்று அந்த லிமிட்டை நிர்ணயிக்க வேண்டும். சர்க்கார் அந்தத் திருத்தை ஒத்துக்கொள்வார்கள் என்று நினைக்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, பத்தாயிரம் ரூபாயில் இருந்து வரி வசூல் செய்வதற்கு 7,500 ரூபாயிலிருந்து ரிஜிஸ்ட்ரேஷன் செய்து கொள்ளவேண்டும் என்றிருக்கிறது. பத்தாயிரம் ரூபாய் வரி வசூல் செய்ய வேண்டுமானால், இரண்டாயிரம், மூவாயிரம் ரூபாய் குறைவாக இருப்பவர்கள் ரிஜிஸ்ட்ரேஷன்

